

ஜூலை 3 2 முதல் ஆரம்பம்

சென்னை

பிராட்வே,

சன் இரு தியேட்டர்களிலும்

தினசரி 3 காட்சிகள்

ஜூபிடர் 3

# அபிமன்யு

இப்பொழுது

தமிழ் நாடெங்கும் நடைபெறுகிறது



பாதுகாப்புடைய சேமிப்பு வேண்டுமானல் தேயிலை தோட்ட பங்குகளையே வற்புறுத்தி வாங்குங்கள்

பூரா விவரங்களுக்கு எழுதவும்:

# நார்தர்ன் இண்டியா டீ எஸ்டேட்ஸ் லிட்.

தலைமை ஆபீஸ்: 12, சௌரிங்கி ஸ்குயர், கல்கத்தா

தோட்டம்: பராஜலிங்கா டீ எஸ்டேட்ஸ், அஸ்ஸாம் (இந்தியன் யூனியன்)

மேற்படி தோட்டம் முழுவதும் நவீன இயந்திர அமைப்புகளுடன் வேலை செய்யும் நிலைமையிலேயே வாங்கப்பட்டது.

**அதிகாரம் பெற்ற மூலதனம் ரூ. 10 லக்ஷங்கள்**
**வழங்கப்பட்ட மூலதனம் ரூ. 5 லக்ஷங்கள்**

பங்குகள் விவரம்:—பங்கு ஒன்று ரூ. 10/- வீதம் 30,000 சாதாரண பங்குகளும், 6 சத வீதம் வட்டி யில்லாத, (அகவிலைக்கே) திரும்பிப் பெறக்கூடிய கூமிலேடிவ் ப்ரிபரன்ஸ் பங்கு ஒன்று ரூ. 100/- வீதம் 2,000 பங்குகளும் பின்வருமாறு வழங்கப்படும்.

சாதாரண பங்குகள்:—ஒவ்வொரு பங்கிற்கும் மனுவுடன் ரூ. 5/-ம், பாக்கித் தொகை பங்குகள் ஒதுக்கப்பட்ட ஒரு வாரத்திற்குள்ளும் கொடுபட வேண்டும்.

ப்ரிபரன்ஸ் பங்குகள்:—ஒவ்வொரு பங்கிற்கும் மனுவுடன் ரூ. 50/-ம் பாக்கித் தொகை பங்குகள் ஒதுக்கப்பட்ட ஒரு வாரத்திற்குள்ளும் கொடுபட வேண்டும். பங்குகளுக்காக செய்யப்படும் ஒவ்வொரு மனுவுடனும் பிரவேசக் கட்டணம் ரூ. 1/- கொடுக்கப்பட வேண்டும்.

மேற்படி பராஜலிங்கா டீ எஸ்டேட்டை, தேயிலைப் பயிர், மதிப்பு வாய்ந்த வனங்கள், ஆயுதங்கள், செடிகள், மெஷின்கள், கட்டிடங்கள் மற்றும் இதர ஸ்தாவர ஜங்கம சொத்துக்களுடன் வழங்கப்பட்டிருக்கும் 5,390·22 (இவற்றில் 2,220·71 ஏகர்கள் இலவசமாக அளிக்கப்பட்டவை) ஏகர்களையும் 12 லக்ஷ ரூபாய்க்குக் கிரய சாஸனம் செய்து பெற்றுக் கொள்வதற்காக மெஸர்ஸ். ஜேம்ஸ் பின்லே & கம்பெனியாரிடம் நடத்திய பேச்சு வார்த்தைகள் முடிந்து ஏற்கெனவே முன் பணமும் செலுத்தியாகி விட்டது.

இதுவரை அதிகமாக அறுவடை செய்யப்பட்ட தேயிலை 4,704 மணங்குகள்
அடுத்த வருஷ அறுவடையில் எதிர்பார்க்கப்படும் தேயிலை 5,000 மணங்குகள்
எதிர்பார்க்கப்படும் வருஷ வருமானம்: தோட்டத்திலுள்ள

| | | |
|---|---|---|
| தேயிலையிலிருந்து மட்டும் | ரூ. | 5 |
| எதிர்பார்க்கப்படும் வருஷாந்திர செலவுகள் | ரூ. | 4 |
| எதிர்பார்க்கப்படும் வருஷாந்திர நிகர லாபம் | ரூ. | 1 |

இந்த எஸ்டேட்டுக்கு 3,000 ஏகருக்கு அதிகமான நெல் விருக்கின்றன. தொழிலாளிகளுக்காக 1,000 ஏகர்களை நிறுத்திக் கொண்டு 2,000 ஏகர்களை மட்டும் விற்பனை செய்தால் கம்பெனிக்கு ரூ. 4/- லக்ஷத்திற்கு அதிகமான வருமானம் கிடைக்கும்.

**தேவையான பங்குகளுக்கு பணத்துடன் ஆங்கிலத்தில் மனுச் செய்து கொள்ளவும்.**

IDEAL

BHARATI

# ஒவ்வொரு மணி நேரத்துக்கும் அதிகமாக அச்சிடுகிறது

அச்சு வேலை துரிதமாக நடக்க—பாரதி அச்சு இயந்திரத்தைவிட அதிக திருப்தி யளிக்கக்கூடிய இயந்திரம் கிடைப்பது துர்லபம். இன்றுவரை கண்டு பிடிக்கப் பட்ட இயந்திர நுட்பங்களையும், நவீன இயந்திர சாதனங்களையும் கொண்டது. இந்த அரிய மெஷின் ஒரு மணிக்கு 2,350 பிரதிகள் வீதம் அச்சிடுகிறது. ப்ரின்டிங் வெகு துல்யமாக இருக்கும். குறைந்த செலவில் நிர்வகிக்கலாம். இயற்கை உறுதியிலும் எளிய அமைப்பிலும் அச்சு இயந்திரங்களுள் முதன்மை பெற்றது பாரதி தான். அரை டெமி, புல்ஸ்காப், க்ரௌன் - போலியோ — ஆகிய சைஸ் களில் கிடைக்கும்.



அதி நேர்த்தியான
அச்சு — அப்பழுக்கற்ற
மைப்பூச்சு



மின்சார சக்தியினாலும்
காலால் மிதித்தும்
இயக்கலாம்

# பாரதி ப்ரின்டிங் மெஷின்

இந்தியா மெஷினரி கோ., லிமிடெட்.
29, ஸ்ட்ராண்ட் ரோடு, கல்கத்தா
மானேஜிங் ஏஜண்டுகள்: தாஸ் பிரதர்ஸ்
போன்: கல்கத்தா-3385 தந்தி: "MARVELLOUS"

A. A. S.

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 7 இதழ் 49 | ஜூலை 4 | சர்வதாரி ௵ ஆனி 21





ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இந்தியாவை இந்தியர் ஆண்டு வந்தார்கள். டில்லிமாநகரின் சிம்மாசனத்தில் புகழ்பெற்ற பிருதிவிராஜன் வீற்றிருந்து அரசு புரிந்தான். பிருதிவிராஜனுக்குப் பிறகு ஆயிரம் வருஷம் டில்லி அன்னியர் வசப்பட்டிருந்தது. டில்லியிலிருந்து பல அன்னிய வம்சத்தினர் இந்தியாவின் பெரும் பகுதியை ஆண்டார்கள். முப்பத்தைந்து வருஷமாக டில்லி இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் தலை நகரமாக விளங்கிற்று. நூறு கோடி ரூபாய் செலவு செய்து பிரிட்டிஷ் ஆளும் வர்க்கத்தார் புதுடில்லி நகரை நிர்மாணித்தார்கள். 'கல்பகோடி காலம்' இருக்கப் போவதாக எண்ணிக் கட்டிய அத்தகைய புதுடில்லி வைஸ்ராய் மாளிகையிலிருந்து சென்ற ஜூன் மாதம் 21ந் தேதி காலை இந்தியாவின் கடைசி இங்கிலீஷ் கவர்னர் ஜெனரல் லார்ட் மவுண்ட் பேட்டன் தமது பத்தினியுடன் பிரயாணமானார். பிரயாணமாகி இங்கிலாந்து செல்ல ஆகாய விமானம் ஏறினார். அவர்கள் புறப்பட்டுச் சில மணி நேரத்துக்கெல்லாம் புதிய இந்திய கவர்னர்—ஜெனரல் ஸ்ரீ சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் இந்தியாவின் ஆட்சி பீடத்தில் அமர்ந்தார்.




இத்தகைய சரித்திரப் பிரசித்தி வாய்ந்த சம்பவம் நிகழ்ந்த ஜூன் மீ 21வ. யன்று மவுண்ட்பேட்டன் தம்பதிகள் புதுடில்லி மாளிகையிலிருந்து அபாரம் ததும்பும் முகங்களுடன் புறப்பட்டபோது ராஜாஜி மேற்படி தம்பதிகளை வழி அனுப்பும் காட்சி இந்த இதழின் நமது அட்டைப் படமாக அமைந்திருக்கிறது. போட்டோ:—எல்லிஸ் ஆர். டங்கன்

# பிரபல விவாகம்



ராஜன் — கமலா

ராவ்சாஹிப் ஆர். நீலகண்டன் (Garrison Engineer) புதல்வி சௌபாக்யவதி கமலாவுக்கும், ஸ்ரீ நடராஜ அய்யர், M. B., B. S., B. S. Sc., (Municipal Health Officer, Kumbakonam) அவர்களின் புதல்வர் சிரஞ்சீவி ராஜன் B.Sc.க்கும் சென்ற ஜூன் மாதம் 10-ம் தேதியன்று மாயவரம் வக்கீல் ஸ்ரீ டி.என். குப்புஸ்வாமி அய்யர் கிருஹத்தில் திருமணம் விமரிசையாக நடைபெற்றது. ஏராளமான பந்து மித்திரர்கள் விஜயம் செய்து தம்பதிகளை ஆசீர்வதித்து பரிசுகள் வழங்கினர். அன்று மாலை ஸ்ரீ G. N. பாலசுப்ரமணியம் அவர்களின் கச்சேரியும் நடைபெற்றது.

---

## செட்டிநாடு ராஜா ஸர் அண்ணாமலை செட்டியார் அவர்கள்

# ஞாபகச் சின்ன ஆலோசனைக் கூட்டம்

•

காலஞ்சென்ற செட்டிநாடு ராஜா ஸர் அண்ணாமலை செட்டியார் அவர்களின் பிரிவு குறித்து ஞாபகச் சின்னம் நிறுவுவதுபற்றி ஆலோசிக்க காரைக்குடி ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேஸ்வரர் ஹைஸ்கூலில் நாளது ஆனி மாதம் 21உ (4-7-48) ஞாயிற்றுக்கிழமை மாலை 6 மணிக்கு ஒரு கூட்டம் நடைபெறும். அன்பர்கள் அனைவரும் வரும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

அன்புள்ள,

**அ. மு. முருகப்ப செட்டியார்**

**கன்வீனர்கள் சார்பாக.**



மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார். | இதழ் 49

# என்ன சேதி?

## புத்தகப் பிரியர் பிரிந்தார்!

சென்னை மாகாணத்தில் கல்வியிற் சிறந்தோர் பலர் இருக்கிறார்கள். இவர்களில் புத்தகப் பிரியம் உள்ளவர்கள் சிலரேயாவர். புத்தகப் பிரியம் இருந்தாலும் புத்தகங்களை வாங்கிச் சேகரித்துச் சொந்தமாகப் புத்தகசாலை வைத்திருப்பவர்கள் மிகச் சிலர். இத்தகைய ஒரு சில புத்தகப் பிரியர்களிலே தலைசிறந்து விளங்கியவர் காலஞ் சென்ற கனம் மதுவிலக்கு மந்திரி ஸ்ரீ டேனியல் தாமஸ் அவர்கள். இவர் தம்முடைய இல்லத்தில் தனிப்படச் சேர்த்து வைத்திருக்கும் புத்தகசாலையைப் போல் இந்த மாகாணத்தில் வேறு எந்தப் பெரிய மனிதர் அல்லது கல்விமான் வீட்டிலும் இல்லையென்று திண்ணமாகச் சொல்லலாம்.

இத்தகைய புத்தகப் பிரியரும் கல்விமானுமான ஸ்ரீ டேனியல் தாமஸ் சிறந்த தேசபக்தராகவும் விளங்கினார். சமூகத் தொண்டு செய்வதில் அளவற்ற ஆர்வங் கொண்டிருந்தார். இனிய சுபாவம் படைத்தவர். முன்பின் தெரியாதவர்களையும் இனிது வரவேற்று முகமன் கூறும் பண்பாடு பெற்றவர். இந்தச் சிறந்த குணங்கள் எல்லாம் அவரைச் சரியான சந்தர்ப்பத்தில் காங்கிரஸ் மகாசபையில் கொண்டு சேர்த்துச் சென்னை மாகாணத்தில் மதுவிலக்கு மந்திரியாகவும் செய்தது. மதுவிலக்குச் சட்டத்தை நிறைவேற்றி வைப்பதில் ஸ்ரீ டேனியல் தாமஸ் கொண்டிருந்த ஆர்வத்தை நாம் நேரில் கண்டிருக்கிறோம்; வியந்து பாராட்டி யிருக்கிறோம்.



ஸ்ரீ டேனியல் தாமஸ்

ஸ்ரீ தாமஸ் அவர்களிடமிருந்து இன்னும் நீடித்த காலத் தொண்டை எதிர்பார்த்துமிருக்கிறோம். இத்தகைய அருங்குணங்கள் படைத்த பிரமுகர்,—சமூகத் தொண்டர், — தமிழ் அன்பர், — திடீரென்று நோய் வாய்ப்பட்டுச் சென்னைப் பெரிய வைத்திய சாலையில் சேர்க்கப்பட்ட செய்தி நமக்கு வியப்பையும் கவலையையும் அளித்தது. என்றாலும், இவ்வாறு அகால மரணம் அடைவார் என்று சிறிதும் எதிர்பார்க்கவில்லை. வைத்தியசாலையிலிருந்து வெளியேறினார் என்று அறிந்ததும், உடம்பு குணமாகிவிட்டது என்றும், மீண்டும் தமது மந்திரிப் பொறுப்பை ஏற்றுக் கொள்வார் என்றும் எதிர்பார்த்தோம். இறைவனுடைய சித்தம் வேறு விதமாயிருந்தது. இத்தகைய அருமையான கல்விமானைத் தமது பரமண்டலத்துக்கு உடனே தருவித்துக் கொள்ள வேண்டுமென்று ஆண்டவன் திருவுளங் கொண்டார் போலும். ஸ்ரீ டேனியல் தாமஸ் அவர்களின் நண்பர்களும் உறவினர்களும் அவருடைய பெயரால் ஒரு சிறந்த புத்தகாலயத்தை நிறுவி அவருடைய நினைவை நிலைநாட்டுவார்கள் என்று நம்புகிறோம்.

## பேராசிரியர் மறைந்தார்!

பள்ளிக்கூடங்களும் கலாசாலைகளும் சென்னை மாகாணத்தில் எத்தனையோ இருக்கின்றன. அவற்றில் ஆயிரக் கணக்கான உபாத்தியாயர்களும் ஆசிரியர்களும் பேராசிரியர்களும் கல்வித் தொண்டு இயற்றி வந்திருக்கிறார்கள். இந்த

ஆயிரமாயிரம் ஆசிரியர்களுக்குள்ளே பேராசிரியர் சாரநாதன் அவர்களைப்போல் ஒரு கல்வி ஸ்தாபனத்துக்காகவே தம்முடைய வாழ்நாளை அர்ப்பணம் செய்தவர் வேறு யாரேனும் உண்டா என்றால், பதில் சொல்லுவது எளிதல்ல. இருபத்தைந்து வருஷ காலம் திருச்சி தேசிய கலாசாலையே ஸ்ரீ சாரநாத ஐயங்காரின் மனைவி, மக்கள், உற்றார், உறவினர், நண்பர்கள் எல்லாமாக இருந்து வந்தது.



பேராசிரியர் சாரநாதன்

தம்முடைய கல்வித் தொண்டுக்கு இடையூறாக எதுவும் இருக்கக் கூடாது என்றே பேராசிரியர் சாரநாதன் கலியாணம் செய்து கொள்ளவில்லை. குடும்ப பாரத்துடன் சேர்த்துத் தேசிய கலாசாலை பாரத்தையும் தாங்க முடியாது என்று அவர் கருதினார் போலும். அது உண்மையென்று நிரூபிக்கும் சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன. திருச்சி தேசிய கலாசாலை பணமுடையினால் பெருந்தொல்லைக்கு உள்ளாயிற்று. சர்க்கார் கலாசாலைப் பிரின்ஸிபால்கள் வாங்கும் சம்பளத்தில் மூன்றில் ஒரு பங்குதான் பேராசிரியர் சாரநாதன் பெற்று வந்தார். அதிலும் ஒரு பகுதியைக் கலாசாலைக்குக் கஷ்டம் வந்தபோது திருப்பிக் கொடுத்தார். அவருடைய உதாரணத்தைப் பார்த்து மற்ற ஆசிரியர்களும் தங்களுடைய சம்பளத்தில் ஒரு பகுதியைத் தியாகம் செய்தார்கள். ஒரு ஸ்தாபனத்தை வளர்ப்பதில் இத்தகைய சிரத்தை கொண்டவர்களைக் காண்பது எளிய காரியமா? 'நம்முடைய நாட்டில் மக்கட்பேறு இல்லாத தனவந்தர்கள் சிலர் வழியில் போகிற சனியனை விலைக்கு வாங்குவதுபோலச் சுவீகாரம் எடுத்துக் கொள்வதைப் பார்க்கிறோம். சுவீகாரப் பிள்ளைகள் தங்களுக்கு எளிதில் கிடைத்த சொத்தைச் சூறையாடுவதையும் பார்க்கிறோம். இத்தகைய நாட்டில் பேராசிரியர் சாரநாதய்யங்கார் அவர்கள் தம்முடைய சொத்து முழுவதையும் திருச்சி நேஷனல் காலேஜுக்கு உயில் மூலம் எழுதி வைத்துவிட்டுக் காலமானார் என்ற செய்தியைப் படித்தபோது நம்முடைய கண்ணில் கண்ணீர் ததும்பியது. இதை எழுதும்போதும் அப்படியே கண்ணீர் ததும்பிக் கண்ணை மறைப்பதால் இத்துடன் நிறுத்திக் கொள்கிறோம். வேறு என்ன சொல்வதற்கு இருக்கிறது?

## தலைவர் மழுப்புகிறார்!

காஷ்மீர் இருப்பதா அல்லது கொள்ளைக்காரர்களின் மிருகத்தனத்துக்கு இரையாவதா என்ற நிலைமை ஏற்பட்டபோது, இந்திய சர்க்கார் ஐக்கிய நாடுகள் சபையிடம் அவசரம் அவசரமாக முறையிட்டுக் கொண்டனர். சிறிதும் தாமதமின்றி நீதி கிடைக்கும் என்ற நம்பிக்கையுடனேதான் அவ்வாறு முறையிட்டார்கள். ஆனால் நீதி கிடைக்கவில்லை. மேற்படி சபை நீதி வழங்காவிட்டாலும் இந்தியாவுக்கு அநீதிமேல் அநீதி வழங்க முற்பட்டதுதான் அக்கிரமமாகும். காஷ்மீரப் பிரச்னையை அது நாலு மாத காலம் விவாதித்து இழுக்கடித்தது. பிறகு இந்தியா ஒப்புக்கொள்ள முடியாத ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. அதன்படி காஷ்மீர நிலைமையை நேரில் பார்ப்பதற்காக ஒரு கமிஷனும் இந்தியாவுக்கு வருகிறது. மேற்படி கமிஷன் தலைவருக்கும் இந்திய சர்க்கார் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கும் நடந்துள்ள தந்திப் போக்குவரத்திலிருந்து அந்தக் கமிஷன் இந்தியா விஷயத்தில் நேர்மையாகவோ பாரபட்சமின்றியோ நடந்து கொள்ளும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை.

கமிஷன் தலைவர் கோரியபடி அதற்கு எல்லா வசதிகளும் அளிப்பதாக ஜவாஹர்லால்ஜி உறுதி கூறியிருக்கிறார். ஆனால் எந்தெந்த விஷயங்கள் பற்றி கமிஷன் இந்திய சர்க்காருடன் விவாதிக்க விரும்புகிறது என்று நேருஜி கேட்டிருப்பதற்கு கமிஷன் தலைவர் சரியான பதில் அளிக்காமல் மழுப்பியிருக்கிறார். இந்தியாவுக்கு உண்மையான தொண்டு புரியவே தம்முடைய ஆர்வம் என்றும் அளந்திருக்கிறார்! இந்தோனேஷியாவுக்கு ஐ. நா. சபைக் கமிஷன் சென்று ஐந்து மாதங்களாகின்றன. உருப்பட்ட காரியம் ஒன்றுகூட நடைபெறவில்லை. அதற்கு மாறாக இந்தோனேஷியா — டச்சுத் தகராறு முற்றி மீண்டும் இரத்தக் களரி ஏற்படும் போல் இருக்கிறது. எனவே இந்தியாவுக்கு வரும் கமிஷன் இந்திய சர்க்காரின் நம்பிக்கையைப் பெற்றாலன்றி, அதன் வேலையும் உருப்பட ஏதுவில்லை.

ஐயையோ! எப்படியிருந்த பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இன்று எப்படிக் கரைந்து விட்டது! இனி ஆசியாவிலிருந்து ஒரு எலும்புத் துண்டு கூட கிடைக்காது போல் இருக்கிறதே!

கட்டாய பாடம்

எனது பிரஜைகளின் அறிவு வளர்ச்சியிலும் ஆத்மார்த்த வளர்ச்சியிலும் நான் எப்போதுமே மிகுந்த கவனம் செலுத்தி வந்திருக்கிறேன். —— நைஜாம்

# மறுபடியும் புலி வருகிறது!

"மன்னர் மறைந்தார்; மன்னர் நீடூழி வாழ்க!" என்று கோஷம் செய்யும் வழக்கம் குறிப்பாக ஐரோப்பாவில் இன்னும் இருந்து வருகிறது.

ஆனால், அத்தகைய கோஷம் ஒரு காலத்துக்குப் பொருத்தமாக இருந்திருக்கலாம். இந்தக் காலத்துக்கு அது சிறிதும் பொருத்தமில்லை என்று தான் சொல்ல வேண்டும்.

"யுத்தம் முடிந்தது; யுத்தம் நீடூழி வாழ்க" என்று கோஷம் செய்வதே இந்தக் காலத்துக்கு மிகவும் பொருத்தமாக இருக்கும்!

ஏனெனில், "மன்னர் நீடூழி வாழ்க!" என்று எவ்வளவோ காலமாக எத்தனையோ பேர் ஆசீர்வாதம் செய்து வந்திருக்கிறார்கள். ஆனால் அதன் பலன் என்ன?

இன்று உலகில் பெரும்பாலான நாடுகளில் மன்னர்கள் மறைந்தது ஒருபுற மிருக்க, மறையாத மன்னர்களும் மணி மகுடங்களை இழந்து விட்டனர். அதாவது, பல நாடுகளில் முடியரசு மறைந்து, குடியரசோ, நடியரசோ, போல்ஷிவிக் அரசோ அல்லது வேறு ஏதாவது சுதம்ப ஆட்சிமுறையோ அமுலுக்கு வந்திருக்கிறது.

பல வருஷங்களுக்கு முன் ருஷ்யா, ஜெர்மனி ஆகிய இரு வல்லரசுகளும், சமீபத்தில் இந்தியாவும் முடியரசுக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டன.

மற்றொரு வல்லரசான ஜப்பானிலும் இப்போது முடியரசு ஆட்டம் கண்டிருக்கிறது.

எனவே, "மன்னர் நீடூழி வாழ்க!" என்ற ஆசீர்வாதமானது இன்றைய உலகம் சம்பந்தப்பட்ட வரையில் பொய்த்து விட்டது எனலாம்!

* * *

"யுத்தம் நீடூழி வாழ்க!" என்று இது வரையில் யாரும் ஆசி கூறியதில்லை. எனினும் யுத்தத்துக்கு இருக்கும் சிரஞ்சீவித் தன்மையை இந்த உலகில் யாராவது மறுக்க முடியுமா?

இதில் பெரிய விந்தை என்னவென்றால், யுத்தத்தை விரும்பும் வல்லரசு ஒன்றுகூட இல்லை. குறிப்பாக ஒவ்வொரு வல்லரசும் தான் யுத்தத்தை வெறுப்பதாகவும், சமாதானத்தையே நாடுவதாகவும் கூறுகிறது. ஆனால் யுத்தத்துக்குத் தன்னைத் தயார் செய்து கொள்ளாத வல்லரசு ஒன்றுகூட இல்லை என்பது பகிரங்க இரகசியம்!

இரண்டு வருஷங்களுக்கு முன் முடிந்த இரண்டாவது மகா யுத்தத்துக்குப் பிறகு அமெரிக்கா, பிரிட்டன் முதலிய வல்லரசுகள் மீண்டும் தங்கள் தங்களுடைய ராணுவ பலத்தைப் பெருக்க வேண்டும் என்பதில் மும்முரமாக ஈடுபட வில்லையா?

யுத்தத்தை ஒழித்துச் சமாதானத்தை நிலை நிறுத்துவதே தங்களுடைய நோக்கமென்று கூறும் வல்லரசுகள் ஒவ்வொன்றும் பிறர் மீது குறை கூறுமல் தங்களுடைய ஆதிக்க ஆசையை விட்டு ஒழிக்குமாயின், யுத்தம் ஏற்படவே இடமிராது என்று துணிந்து கூறலாம்.

இன்று வல்லரசுகள் ஆதிக்கம் செலுத்தி வரும் ஒவ்வொரு இடமும் யுத்தத்தைத் தூண்டி விடுவதற்கான ஒரு பொறியாக இருந்து வருகிறது.

* * *

இரண்டாவது மகா யுத்தத்தில் தோல்வியுற்ற ஜப்பானிலும் ஜெர்மனியிலும் வல்லரசுகள் இன்றும் ஆதிக்கம் செலுத்தி வருகின்றன.

ஜப்பானில் அமெரிக்காவின் ஏகபோகமான ஆதிக்கம் இருந்து வருவதால், அங்கு யுத்தம் ஏற்படக் காரணமில்லை. ஏனெனில், பலம் பொருந்திய இரண்டு வல்லரசுகள் மோதிக் கொண்டால்தானே?

ஆனால் ஜெர்மனியின் நிலைமை முற்றிலும் வேறாகும்.

ஜெர்மனி படுதோல்வி யடைந்து விட்டது. அதன் தலைவர்கள் தூக்கு மேடைக்குப் பலியாகி விட்டார்கள்; அதன் கைத்தொழில்கள் நாசமாகி விட்டன. ஜெர்மானியர்களை உணவுப் பஞ்சம் வாட்டி வருகிறது. இன்று ஜெர்மனியைப் போல் உலகிலுள்ள வேறெந்த நாடும் அவ்வளவு கேழ்த்தரமான நிலையில் இல்லை.

அத்தகைய துர்ப்பாக்கிய நிலைமையிலும், வல்லரசுகளின் ஆதிக்கம் ஜெர்மனியை விட்டபாடில்லை!

முன்னர் ஜெர்மனியர்களை நசுக்கி ஜெர்மனியின் போர்க்கோளத்துக்கு இனி எக்காலத்திலும் இடமிராமற் செய்வதற்காக வல்லரசுகள் பாடுபட்டன. அந்த முயற்சியில் வெற்றியும் அடைந்தன.

ஆனால் அதே ஜெர்மனியை மீண்டும் உத்தாரணம் செய்வதற்காக இப்போது வல்லரசுகள் பாடு படுகின்றன; பாடுபடுவதாகக் கூறுகின்றன!

தோல்வியுற்ற ஜெர்மனியை உத்தாரணம் செய்வதற்காக ஒன்றல்ல, இரண்டல்ல, நாலு வல்லரசுகள் போட்டி போடுவதால், "நண்பர்களிடமிருந்து எங்களைக் காப்பாற்றுங்கள்!" என்று ஜெர்மானியர்கள் கடவுளிடம் கதறும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது!

ஜெர்மனியின் தோல்விக்கு ருஷ்யா, அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் முதலிய நாலு வல்லரசுகள் காரணமாதலால், ஜெர்மன் தலைநகரான பெர்லின் நாலு பிரதேசங்களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பிரதேசத்திலும் ஒவ்வொரு வல்லரசின் ஆதிக்கம் இருந்து வருகிறது.

இரண்டு வல்லரசுகளின் ஆதிக்கம் இருந்துவரும் கொரியாவிலேயே நித்தியத் தகராறாக இருக்கும்போது, நாலு வல்லரசுகளின் ஆதிக்கம் ஏற்பட்டுள்ள ஜெர்மனியில் கேட்கவா வேண்டும்? ஆதிமுதல் ஒரே ரகளைதான்!

ஜெர்மனியை உத்தாரணம் செய்ய வேண்டுமென்றால், வல்லரசுகள் தாங்கள் இருக்குமிடத்தில் இருந்து கொண்டே உதவி செய்ய முடியும். ஆனால் வல்லரசுகளின் அந்தரங்க நோக்கம் வேறு.

மற்ற சில ஐரோப்பிய நாடுகளைப் போல் ஜெர்மனியிலும் பொது உடைமை ஆதிக்கம் ஏற்படாமல் தடுக்கவேண்டும் என்பது அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் இவைகளின் எண்ணம்.

ஐரோப்பிய யுத்தத்தில் தன்னைக் காட்டிலும் உயிரிலோ, உடைமையிலோ அதிக நஷ்டமடைந்த நாடு வேறெதுவும் இல்லாததால், ஜெர்மனியில் ஆதிக்கம் செலுத்த தனக்குள்ள உரிமை மறுக்க முடியாதது என்பது ருஷ்யாவின் கூற்று.

இதைத் தவிர ஜெர்மனியில் நாஜியர்கள் விஷயத்தில் அமெரிக்காவும் பிரிட்டனும் அனுதாபம் காட்ட ஆரம்பித்திருக்கின்றன என்று ருஷ்யா சமீப காலமாகப் புகார் கூறி வருகிறது.

இவ்வாறு பரஸ்பரமுள்ள அபிப்பிராய பேதம் முற்றி, பெர்லினில் இப்போது மற்றொரு யுத்தத்துக்குப் பூர்வாங்கமான பெரும் நெருக்கடி உண்டாகி யிருக்கிறது.

• • •

பெர்லினில் கரன்ஸி நோட்டுகள் வெளியிடும் முழு அதிகாரமும் தங்களிடம் இருக்க வேண்டும் என்று ருஷ்ய அதிகாரிகள் கூறினர். அந்த அதிகாரத்தில் தங்களுக்கும் பங்கு இருக்க வேண்டுமென அமெரிக்க பிரிட்டிஷ், பிரஞ்சு அதிகாரிகள் கோரினர். இவ்விஷயமாக சமரசம் எதுவும் ஏற்படாததால், தங்களுடைய பிரதேசங்களில் தங்கள் சொந்த கரன்ஸி நோட்டுகளை வெளியிடுவது என்று மேற்படி மூன்று வல்லரசுகளும் தீர்மானம் செய்தன.

இவ்விதம் மூன்று வல்லரசுகளுக்கும் ருஷ்யாவுக்கும் தகராறு ஏற்பட்டு விட்டதால், ருஷ்ய அதிகாரிகள் பெர்லினில் அந்த வல்லரசுகளின் ஆதிக்கத்திலிருக்கும் மேற்குப் பகுதிப் பிரதேசங்களுக்கு மின்சார சப்ளையை நிறுத்தி விட்டனர். ரயில் போக்குவரத்தையும் ரத்துச் செய்து விட்டார்கள். எனவே, அப்பகுதிகளில் கைத்தொழில்கள் ஸ்தம்பித்து விட்டதுடன், அங்கு உணவுப் பொருள்களும் செல்லவில்லை.

மின்சார நிலையமும் மற்றும் முக்கிய சாதன வசதிகளும் ருஷ்யா ஆதிக்கம் செலுத்தும் பகுதியிலே இருப்பதால், மற்ற வல்லரசுகள்மீது உடனே வஞ்சம் தீர்ப்பது ருஷியாவுக்குச் சுலபமாகி விட்டது.

மேற்படி பகுதிகளில் இருக்கும் இருபது லட்சம் ஜெர்மானியர்களுக்கு

அமெரிக்க விமானங்கள் உணவுப் பொருள்களை ஏற்றிச் சென்று வருகின்றன. எனினும் விமானங்களின் மூலம் அத்தனை லட்சம் பேருக்கும் எவ்வளவு காலம் உணவுப் பொருள்களைக் கொண்டு போய்க் கொடுக்க முடியும்?

எனவே, மேற்படி தடையை நீக்கும்படி ஜெர்மனியிலுள்ள பிரிட்டிஷ் ராணுவ கவர்னர் ருஷ்ய அதிகாரிகளைக் கெஞ்சும் பாஷையில் இல்லாவிட்டாலும் கெஞ்சும் தொனியில் மன்றாடிக் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

• • •

ருஷ்யாவின் நடவடிக்கை அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் இம் மூன்று வல்லரசுகளுக்கும் மிகுந்த ஆத்திரத்தை உண்டுபண்ணி யிருப்பதால், முறையே வாஷிங்டனிலும் லண்டனிலும், பாரிஸிலும் வெகு மும்முரமாக மந்திராலோசனைகள் நடந்து வருகின்றனவாம்.

பிரிட்டனில் ஓய்வெடுத்துக் கொள்வதற்காகவும் உல்லாச யாத்திரைக்காகவும் சென்றிருந்த இரண்டொரு மந்திரிகள் லண்டனுக்குத் திரும்பி ஓடோடியும் வந்து கொண்டிருக்கிறார்கள்.

"ருஷ்யாவுடன் போர் தொடங்குமுன், அதனுடன் வர்த்தகத் தொடர்பைக் கத்தரித்துக் கொண்டு விட வேண்டும். 1939-ம் வருஷம் யுத்தம் ஆரம்பமாவதற்கு எத்தகைய விபரீதங்கள் காரணமாக இருந்தனவோ அதே விபரீதங்கள் இப்போது நம் கண்முன் மீண்டும் நடந்து வருகின்றன" என்று ஒரு பிரபல பிரிட்டிஷ் பத்திரிகை அங்கலாய்த்துக் கொண்டிருக்கிறது.

நேச தேசங்களை நிர்ப்பந்தித்து அரசியல் சலுகைகள் பெறுவதற்காக நிராபராதிகளான ஜெர்மனியர்களை ருஷ்ய அதிகாரிகள் இப்படி பட்டினி போடலாமா என்று பிரிட்டிஷ் அறிக்கையொன்று வருந்துகிறது.

ருஷ்யாவின் தடை முறைகளால் அமெரிக்க, பிரிட்டிஷ், பிரஞ்சுப் பகுதிகளில் யுத்தகால சிக்கன முறைகள் கைக்கொள்ளப் பட்டிருக்கின்றன.

இவ்வாறாக பெர்லின் பகுதிகளின் நிலைமை அல்லோல கல்லோலமாகி இருக்கிறது.

சிறிதும் தாமதமின்றி ருஷ்யாவுக்கும் மற்ற வல்லரசுகளுக்கும் சமரசம் ஏற்பட்டாலொழிய, மேற்படி வல்லரசுகளுக்கு மூன்றே வழிகள்தான் இருக்கின்றன.

1. ருஷ்யாவின் கோரிக்கைக்கு இணங்கித் தங்களுடைய கௌரவத்தை விட்டுக் கொடுக்க வேண்டும். அதாவது ருஷ்யாவின் நாணயச் செலாவணி நோட்டுகளை தங்களுடைய பிரதேசங்களிலும் அங்கீகரிக்க வேண்டும்.

2. இல்லாவிடில் இருபது லட்சம் ஜெர்மானியர்களின் க்ஷேமத்தை உத்தேசித்து அவர்கள் மேற்கொண்டு கஷ்டங்களுக்கு இலக்காகாமல் இருப்பதற்காக மூன்று வல்லரசுப் பிரதிநிதிகளும் பெர்லினிலிருந்து வெளியேறி விட வேண்டும்.

3. அப்படியும் செய்யாவிட்டால் யுத்தம் தொடர்ந்து தங்களுடைய உரிமையை ஸ்தாபித்துக் கொள்ள வேண்டும்.

முதல் இரண்டு வழிகளையும் தாங்கள் பின்பற்றப் போவதில்லை என்று பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரி ஸ்ரீ பெவின் உறுதியாகக் கூறிவிட்டார்.

ருஷ்யா விஷயத்தில் இனி மிகவும் கண்டிப்பாக நடந்து கொள்ள வேண்டுமென்று பிரிட்டிஷ் பிரமுகர்களும் ஆர்ப்பாட்டம் செய்கிறார்கள்.

ருஷ்யாவுடன் கண்டிப்பாக இருந்தால்தான் மூன்றாவது உலக மகா யுத்தத்தைத் தடுக்க முடியும் என்று சர்ச்சில் கூறுகிறார். எனினும், அதே மூச்சில் அப்படி கண்டிப்பாக இருந்தாலும் அமைதியை நிலைநிறுத்துவது சாத்தியமென்று நிச்சயமாகச் சொல்ல முடியாது என்கிறார்!

அதாவது இனி மூன்றாவது மகா யுத்தம் ஏற்பட்டே தீரும் என்பதுதான் அதன் அர்த்தமாகும்!

ருஷ்யாவுடன் மிகவும் கண்டிப்பாக இருந்து அதன் விளைவாக யுத்தம் நேருமாயின், அத்தகைய யுத்தத்தைப் பிறகு "உலகிலே யுத்தத்தை ஒழிக்கும் யுத்தம்" என்று வழக்கம் போல் வர்ணிக்கலாம் அல்லவா?

எனினும் ஆயுதப்போரிலும், ஆயுதப் போர் நடைபெறாத சமயத்தில் வாய்ப் போரிலும் பூரண நம்பிக்கை கொண்ட சர்ச்சிலுக்கு சமாதானத்தில் என்றுமே நம்பிக்கை இருந்ததில்லை.

அப்படியானால் மேலே குறிப்பிட்ட மூன்றாவது வழியைப் பின்பற்றி பயங்கரமான உலகப் பிரளயத்தை உண்டுபண்ண அமெரிக்காவோ அல்லது பிரிட்டனோ துணியுமா?

## வரவேற்பு

ஜூன் 20உ. விமானத்தில் புது டில்லிக்கு விஜயம் செய்த ராஜாஜியை இராணுவ மரியாதைகளுடன் இந்திய சர்க்கார் மந்திரிகள் வரவேற்றார்கள்.

உத்தியோகத் தலைவர்களுக்குப் பிரதம மந்திரி ஜவஹர்லால் நேரு அறிமுகம் செய்து வைத்தார்.

•

சர்க்கார் மாளிகையின் தர்பார் மண்டபத்தில் இந்திய அரசாட்சிப் பொறுப்பை ஏற்றுச் சொற்பொழிவு ஆற்றினார்.





இந்திய நாட்டை இந்தியரிடம் ஒப்படைத்துச் சென்ற மவுண்ட் பாட்டன் தம்பதிகளுக்குப் போகும்போது பிரமாத உப சாரங்கள் நடைபெற்றன.




### இருபத்தெட்டாம் அத்தியாயம்

## நிச்சயதார்த்தம்

கிட்டா வய்யரின் அதட்டலுக்குச் சிறிது பயன் ஏற்பட்டது. வீட்டுக்குள்ளே கூச்சல் கொஞ்சம் அடங்கியது. பிறகு விஷயம் இன்னது என்பதும் வெளியாயிற்று.

சீமாச்சு வய்யரின் மனைவி அன்னம்மாளின் காதில் மதராஸிலிருந்து வந்திருந்தவர்கள் பேசிக் கொண்டிருந்தது அரை குறையாக விழுந்தது. அதிலிருந்து மாப்பிள்ளைப் பையன் லலிதாவைக் கலியாணம் செய்து கொள்ள இஷ்டப்படவில்லையென்றும், சீதாவைக் கலியாணம் செய்து கொள்ள விரும்புகிறான் என்றும் தெரிந்தன. பையனுடைய தாயாரும் தகப்பனும் முதலில் அவனுடைய மனதை மாற்றப் பார்த்தார்கள். பையன் பிடிவாதமாயிருந்த படியால் கடைசியில் அவர்களும் சரியென்று சொல்லிவிட்டார்கள். ஆனால் இந்த விஷயத்தைக் கிட்டா வய்யரிடம் எப்படிப் பிரஸ்தாபம் செய்வது என்று அவர்களுக்குக் கொஞ்சம் தயக்கம். இன்ஷூரன்ஸ் சுப்பய்யரிடம் அதைப் பற்றி அபிப்பிராயம் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். இப்போதே சொல்லி, உண்டு, இல்லை என்று நிச்சயப்படுத்திக்கொண்டு போகிறதா அல்லது ஊருக்குப் போய்க் கடிதம் எழுதுகிறோம் என்று சொல்லிவிட்டுப் போய் விவரமாகக் கடிதத்தில் எழுதுவதா என்பதைப் பற்றி அவர்களுக்குள் விவாதம் நடந்து கொண்டிருக்கிறது.

இதையெல்லாம் கேட்டவுடன் சாதுவான கிட்டா வய்யருக்குக்கூட ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது. ஆனால் ஆத்திரத்தை யாரிடம் காட்டுவது என்று தெரியாமல் சீமாச்சு வய்யரைப் பார்த்து, "என்ன ஓய்! நான் அப்போதே சொன்னேனே, பார்த்தீரா! மதராஸ்காரன்களுடைய யோக்யதை தெரிந்ததா?" என்றார்.

"தெரியாமல் என்ன, ஓய்? நானுந்தான் அப்போதே சொன்னேனே! ஆனாலும் இந்தப் பிரம்மஹத்தி சொல்கிறதை வைத்துக் கொண்டு ஒன்றும் நாம் தீர்மானித்து விடக்கூடாது. இந்தச் சோழன் பிரம்மஹத்திக்கு ஏதாவது கலகம் பண்ணி வைப்பதே தொழில். அவர்கள் ஒன்று சொல்லியிருப்பார்கள்; இவளுடைய செவிட்டுக் காதில் வேறு ஒன்று விழுந்திருக்கும்! எல்லாவற்றுக்கும் நான் போய் விஷயம் இன்னதென்று ஸ்பஷ்டமாகத் தெரிந்து கொண்டு வந்து விடுகிறேன். ஏ சோழன் பிரம்மஹத்தி! இப்படி வந்து தொலை! இருக்கிற பிராரப்தங்கள் போதாது என்று நீ ஒருத்தி வந்து சேர்ந்தாயே? ஏ, ஏழரை நாட்டுச் சனியனே! வருகிறாயா? இல்லையா?" என்று இம்மாதிரி சீமாச்சுவய்யர் தமது தர்ம பத்தினியை அருமையாக அழைக்க, அந்த அம்மாளும் "என்னை எதற்காக இப்படிப் பிடுங்கி எடுக்கிறீர்கள்?" என்று வாய்க்குள் முணு முணுத்துக் கொண்டே புறப்பட்டாள். இருவரும் வீதியில் போகும் போதுகூட, சீமாச்சு வய்யர் தம்முடைய தர்ம பத்தினியை வாழ்த்திய குரல் கேட்டுக் கொண்டிருந்தது.




சீமாச்சு அய்யர் மேற்கண்டவாறு தமது மனைவி

யைத நிட்டியதானது அங்கேயிருந்த மற்றவர்கள் எல்லாருக்கும் ஓரளவு மனத் தெளிவை உண்டாக்கியது.

"இந்தப் பிராமணர் எதற்காக அன்னம்மாளை இப்படி வைகிருர்? அவள் என்ன செய்வாள்?" என்ருள் சரசுவதி அம்மாள்.

"பின்னே, யார்தான் என்ன செய்வார்கள்? எந்தக் காரியமும் பிராப்தம் போலத்தானே நடக்கும்?" என்ருர் கிட்டா வய்யர்.

"இவர்கள் வேண்டாம் என்ருல் லலிதாவுக்குக் கலியாணம் ஆகாமல் போய்விடுமோ? எனக்கு மட்டும் உத்தரவு கொடுங்கள். நாளைக்கே ஆயிரம் வரன் கொண்டு வருகிறேன்!" என்ருர் அப்பாத்துரை சாஸ்திரிகள்.

"போதும்; போதும்! இனிமேல் இந்த வருஷம் என் பெண்ணுக்குக் கலியாணம் என்கிற பேச்சே வேண்டாம். முதலிலே, வந்தவர்கள் எல்லாரும் ஊருக்குப் போகட்டும்!" என்ருள் சரஸ்வதி அம்மாள்.

இந்தச் சமயத்தில் ராஜம்மாள், 'அண்ணு! குற்றம் என்பேரில். நான் துரதிர்ஷ்டக்காரி. எங்கே போனலும் என்னுடைய துரதிர்ஷ்டம் என்னைத் தொடர்ந்து வருகிறது!" என்ருள்.

"ஏதாவது உளருதே! உன்னை யார் இப்போது என்ன சொன்ஞர்கள்?" என்ருர் கிட்டா வய்யர்.

"இந்தப் பெண் உள்ளே விசித்து விசித்து அழுது கொண்டிருக்கிறது! சீதா என்ன செய்வாள்? வந்திருந்தவர்களின் முன்னல் வரமாட்டேன் என்றுதான் சொன்னுள். லலிதா தான் 'நீ வராவிட்டால் நானும் போக மாட்டேன்' என்று பிடிவாதம் பிடித்தாள். மன்னியாவது தடுத்தாளா? அதுவும் இல்லை!" என்ருள் பெரியம்மாள் அபயாம்பாள்.

"நான் ஒரு அசடு, என் பெண் பெரிய அசடு — என்பதுதான் தெரிந்த விஷயமாச்சே! நீங்கள், எல்லாம் தெரிந்த பெரியவர்கள், இருந்தீர்களே? சொல்கிறதுதானே?" என்று சரஸ்வதி அம்மாள் சீறினுள்.

'போதும் வாக்கு வாதம்! நிறுத்துங்கள்! அழுகிற குழந்தையைப் போய் யாராவது சமாதானம் செய்யுங்கள்!" என்ருர் கிட்டா வய்யர்.

"அழுகை என்ன அழுகை! எதற்காக அழ வேண்டும்? செய்கிறதையும் செய்து விட்டு ஜாலம் வேறே!" என்ருள் சரசுவதி அம்மாள்.

உள்ளே, சீதாவைச் சமாதானப் படுத்த முயன்று கொண்டிருந்த லலிதாவின் காதில் இதெல்லாம் விழுந்தது. அம்மா சொன்ன கடைசி வார்த்தையைக் கேட்டதும் லலிதா ஆங்காரத்துடன் வெளியில் வந்தாள்.

"அப்பா! நான் சொல்கிறதைத் தயவு செய்து கேளுங்கள். இன்றைக்கு வந்த பிள்ளையை நான் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன். என்னை வெட்டிப் போட்டாலும் மாட்டேன். முன்னயே பிடித்து எனக்கு இதெல்லாம் பிடிக்கவில்லையென்று சொல்லிக் கொண்டிருக்கிறேன். நீங்கள் ஒருவரும் கேட்கவில்லை. அம்மா அநியாயமாகச் சீதாவைக் கோபித்துக் கொள்கிருள். இது தெய்வத்துக்கே பொறுக்காது. சீதா முகத்தை அலம்பிக் கொள்ளக்கூட மாட்டேன் என்ருள். என்னுடன் வருவதற்கும் அவள் இஷ்டப்படவில்லை. நான்தான் வலுக்கட்டாயப்படுத்தி அழைத்துக் கொண்டு வந்தேன். அப்படியிருக்க அவளைக் கோபித்துக் கொண்டு என்ன பயன்? இப்படியெல்லாம் நீங்கள் அநியாயமாய்ச் சீதாவின்பேரில் பழி சொல்வதாயிருந்தால் நான் இந்த வீட்டை விட்டுப் போய் விடுகிறேன்; இல்லாவிட்டால் கிணற்றில் விழுந்து செத்துப் போகிறேன்!" என்று ஆத்திரமும் அழுகையுமாய்ப் பேசினுள்.

இவ்விதம் லலிதா தன் தோழிக்காகப் பரிந்து பேசியது எல்லாருடைய மனதையும் இளகச் செய்தது. ஆனல் சரசுவதியின் கோபத்தை மட்டும் அதிகப் படுத்தியது. "போ! இப்போதே போய்க் கிணற்றில் விழு! எனக்குப் பெண்ணே பிறக்கவில்லை என்று நினைத்துக் கொள்கிறேன்!" என்று சொன்னுள்.

"அடாடடா! இதெல்லாம் என்ன பேச்சு? இப்போது ஒன்றும் தீர்மானமாகி விட வில்லையே? சீமாச்சு தான்போயிருக்கிருனே? விஷயத்தைத்

தெரிந்துகொண்டு அவன் வரட்டுமே?" என்றார் அப்பாத்துரை சாஸ்திரிகள்.

"சீமா மாமா என்னத்தை வேண்டுமானாலும் தெரிந்து கொண்டு வரட்டும்! அந்தப் பிள்ளை என்னைப் பிடித்திருக்கிறது என்று சொன்னாலும் நான் பண்ணிக் கொள்ளப் போவதில்லை. சத்தியமாய்ப் பண்ணிக் கொள்ளப் போவதில்லை!" என்று லலிதா சபதம் செய்தாள்.

"லலிதா! இதென்ன நீ கூட இப்படியெல்லாம் பேசுகிறாய்?" என்றார் கிட்டா வய்யர்.

"அவன் சுயமாகவா பேசுகிறான்? சொல்லிக் கொடுத்ததல்லவா பேசுகிறான்?" என்றாள் சரஸ்வதி அம்மாள்.

"மன்னி! என்னைச் சொல்கிறாயா? நான் ஒரு பாவமும் அறியேனே! லலிதாவுடன் நான் அரை நிமிஷம் பேசக்கூட இல்லையே?" என்றாள் ராஜம்மாள்.

"நான் உங்களையொன்றும் சொல்லவில்லை. என் பிள்ளையைத்தான் சொல்கிறேன். சூரியாவின் துர்ப்போதனைதான் இப்படி லலிதாவைப் பைத்தியமாக அடித்து விட்டது. அவனுடைய புத்தியையும் யாரோ கெடுத்திருக்கிறார்கள்......!"

இத்தனை நேரம் சும்மாக் கேட்டுக் கொண்டு நின்ற சூரியா இப்போது சம்பாஷணையில் தலையிட்டான்.

"என்னுடைய புத்தி சரியாகத்தான் இருக்கிறது. இந்த முட்டாள்தனமெல்லாம் வேண்டாம் என்று நான் அப்போதே சொன்னேன். யாரும் கேட்கவில்லை. அம்மா! உங்கள் காலத்தில் நீங்கள் எல்லாரும் கலியாணம் பண்ணிக் கொண்டு திண்டாடுகிறது போதும். எங்களை எங்கள் இஷ்டப்படி விட்டு விடுங்கள். லலிதாவுக்குப் பிடித்திருந்தால் கலியாணம் பண்ணிக் கொள்வாள்; இல்லாவிட்டால் பிரம்மதேவன் வந்து சொன்னாலும் பண்ணிக்கொள்ள மாட்டாள். லலிதாவுக்குச் சொன்னதுதான் சீதாவுக்கும்! மதராஸிலிருந்து வந்திருக்கும் மகா பிரகஸ்பதியைச் சீதாவுக்கும் பிடிக்காவிட்டால் பிடிக்கவில்லை என்று தைரியமாய்ச் சொல்லி விடட்டும். இதற்காக அவள் விம்மி அழ வேண்டிய அவசியம் இல்லை!" என்று சொன்னான் சூரியா.

சூரியாவின் உள்ளம் அப்போது உண்மையில் கொந்தளித்துக் கொண்டிருந்தது. மதராஸிலிருந்து பெண் பார்க்க வந்த மகா பிரகஸ்பதியை அவனுக்கு ஏற்கெனவே பிடிக்கவில்லை. அந்த பிரகஸ்பதி லலிதாவுக்குப் பதிலாகச் சீதாவை மணந்து கொள்ள விரும்புகிறான் என்ற செய்தி கேட்டதும் அந்தக் கொந்தளிப்பு அக்னியில் பெட்ரோலை விட்டதுபோல் ஜ்வாலை விட்டுப் பொங்கியது.

• • •

காமரா உள்ளின் தரையில் குப்புறப் படுத்துக்கொண்டு சீதா இன்னமும் விம்மிக் கொண்டிருந்தாள். லலிதா அவளுக்கு ஆறுதல் கூறிச் சமாதானப்படுத்த முயன்றாள். ஆனால் கபடமற்ற லலிதாவுக்குச் சீதாவின் மனோ நிலை என்ன தெரியும்? உள்ளத்தில் பொங்கிய ஆனந்தத்தை மறைத்துக் கொள்ளுவதற்காகவே சீதா விம்மினாள். அவளுடைய மனக்கண் முன்னால் உலகமே ஒரு ஆனந்த நந்தவனமாகத் தோன்றியது. அந்த நந்தவனத்திலிருந்த மரங்களும் செடிகளும் பல வர்ணப் புஷ்பங்களுடன் குலுங்கின. அந்த நந்த வனத்தில் குயில்கள் பாடின; மயில்கள் ஆடின; மான்கள் துள்ளி ஓடின; கிளிகள் மழலை பேசின; புறாக்கள் கொஞ்சி முத்தமிட்டன; சந்தன மரங்களின் சுகந்தத்துடன் மந்தமாருதம் வீசியது. இத்தகைய ஆனந்த நந்தவனத்தில் சீதாவின் உள்ளம் சஞ்சரித்துக் கொண்டிருந்தபோது தூரத்தில் எங்கேயோ கடல் பொங்கி மலைபோல் அலைகள் கிளம்பி மோதி விழும் சத்தமும் கேட்டுக் கொண்டிருந்தது.

• • •

சற்று நேரத்துக்கெல்லாம் சீமாச்சுவய்யர் கிட்டா வய்யருக்கு ஆள் விட்டு அனுப்பினார். கிட்டா வய்யர் போனார். அவரிடம் சப் ஜட்ஜ் சாஸ்திரியாரும் அவருடைய சக தர்மிணியும் விஷயத்தை ஸ்பஷ்டமாகச் சொல்லி விட்டார்கள். "உங்கள் குமாரிக்கு ஒரு குறைவும் இல்லை. கிளி மாதிரி தான் இருக்கிறாள். ஆனால் இந்தக்காலத்துப்

பிள்ளைகளின் போக்கே தனியாயிருக்கிறது. 'முதலிலே சீதாவைப் பார்த்தேன்; பார்த்தவுடனே அவளைப் பிடித்து விட்டது. கலியாணம் பண்ணிக்கொண்டால் அவளைத்தான் பண்ணிக் கொள்வேன்' என்று பிள்ளையாண்டான் சொல்லுகிறான். நாங்கள் எவ்வளவோ சொல்லிப் பார்த்தோம்; கேட்கவில்லை. ஊருக்குப் போய் யோசித்துக் கொண்டு எழுதலாம் என்று எண்ணினோம். ஆனால் எப்படியோ விஷயம் உங்களுக்கு எட்டி விட்டபடியால் இப்போதே சொல்லி விட்டோம். உங்களுக்கு இஷ்டமாயிருந்தால் நாளைக்கே நிச்சயதார்த்தம் செய்து விடலாம். பெண்ணுக்கோ பெண்ணின் தாயாருக்கோ பிடிக்காவிட்டால் அதையும் சொல்லி விடுங்கள்; இதில் வலுக் கட்டாயம் ஒன்றுமில்லை" என்றார்கள்.

கிட்டா வய்யர் திகைத்துப் போனார். ஒன்றும் பதில் சொல்லத் தோன்றவில்லை. "அதற்கென்ன? பெண்ணின் தாயாரைக் கேட்டுவிட்டுச் சொல்கிறேன்" என்று புறப்பட்டார். புறப்பட்டவர் நேரே வீட்டுக்கு வரவில்லை. சீமாச்சு வய்யரையும் சுப்பய்யரையும் குளத்தங்கரைப் பங்களாவுக்கு அழைத்துப் போய் யோசனை செய்தார். அவர்கள் இருவரும், "பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று! உங்கள் பெண்ணுக்கு என்ன? நூறு வரன் நாங்கள் பார்த்துச் சொல்கிறோம். அந்த பம்பாய்ப் பெண்ணுக்கு வரன் கிடைப்பதுதான் கஷ்டம். பணம், காசு இல்லாமல் பண்ணிக்கொள்கிறேன் என்கிறார்கள். வேண்டாம் என்று எதற்காகச் சொல்லவேண்டும்? அதனால் யாருக்கு என்ன லாபம்? நாளைக்கே 'பாக்கு வெற்றிலையைப் பிடி!' என்று நிச்சயதார்த்தம் செய்துவிடுவதுதான் சரி!" என்றார்கள். ஆரம்பத்தில் ஏற்பட்டிருந்த ஆத்திரம் தணிந்துவிட்டபடியால் கிட்டா வய்யருக்கும் அதுதான் நியாயம் என்று தோன்றியது. ஆனால் இதைத் தம்முடைய பாரியையிடம் எப்படிச் சொல்லிச் சரிக்கட்டுவது என்று யோசித்துக் கொண்டு இரவு ஒரு மணிக்கு வீடு திரும்பினார். அதற்கு வழி அவருடைய புதல்வன் சூரியா சொல்லிக் கொடுத்தான்.

தூக்கம் பிடியாமல் சிந்தனையில் ஆழ்ந்திருந்த சூரியாவுக்கு அதற்குள் மனம் தெளிவடைந்திருந்தது. யார் கண்டது? ஒருவேளை கடவுளுடைய விருப்பம் இவ்விதமிருக்கலாம்; டில்லியில் எழுநூற்றைம்பது ரூபாய் சம்பளம் உள்ள உத்தியோகம் பார்க்கும் சௌந்தரராகவன் தன்னைக் காட்டிலும் சீதாவுக்குத் தக்க வரன் என்பதில் சந்தேகம் இல்லையல்லவா? அத்தங்காளின் அதிர்ஷ்டம் இந்த விதமாக அவளைக் கொண்டு விட்டிருக்கிறதோ என்னமோ? சீதாவின் வாழ்க்கை இன்பத்திற்குக் குறுக்கே போய் நிற்கத் தனக்கு என்ன உரிமை? அது என்ன நியாயம்? அன்றிரவு தாமோதரம் பிள்ளை வீட்டு மேல் மாடியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தபோது அவனுடைய நண்பன் பட்டாபிராமன் சொன்னது சூரியாவுக்கு நினைவு வந்தது. "செடியில் உள்ள புஷ்பத்தைத் தூரத்தில் இருந்து பார்த்தே நான் சந்தோஷப் படுவேன். அதைப் பறித்துக் கசக்கி முகர வேண்டும் என்ற ஆசை எனக்குக் கிடையாது!" என்று சொன்னான் அல்லவா? அடடா! எவ்வளவு தாராளமான உள்ளம் அவனுக்கு! அந்தக் கொள்கையைத் தானும் ஏன் பின்பற்றக் கூடாது?

• • •

கிட்டா வய்யர் இரவு ஒரு மணிக்கு வீட்டுக்குத் திரும்பி வந்ததும் சூரியா "அப்பா! அவர்கள் என்ன சொன்னார்கள்? என்ன முடிவு ஆயிற்று?" என்று கேட்டான். "இன்னும் நீ தூங்கவில்லையா, சூரியா? உன்னிடம் தான் யோசனை கேட்க வேண்டும் என்று எண்ணிக்கொண்டு வந்தேன். அன்னம்மாள் சொன்னது உண்மைதான். 'சீதாவைக் கலியாணம் பண்ணிக் கொள்கிறேன்' என்று அந்தப் பையன் சொல்கிறான். அவனுடைய அப்பா அம்மாவும் அதற்குச் சம்மதித்து விட்டார்கள். பணங் காசு சீர் வகையறா ஒன்றும் எதிர் பார்க்கவில்லை என்று சொல்கிறார்கள். இந்த நிலைமையில் நாம் என்ன செய்ய வேண்டும் என்று உன் அபிப்பிராயத்தைச் சொல். இந்த மாதிரி விஷயங்களில் உன் தமையன் கங்காதரனைக்

காட்டிலும் உன்னுடைய யோசனை யைத்தான் நான் மதிக்கிறேன். அவனுக்குப் படித்துப் பரீட்சை பாஸ் செய்யத் தெரியுமே தவிர 'உலக விவ காரம் தெரியாது. நீ அப்படியில்லை. நாலும் தெரிந்தவன். உன் அபிப்பிரா யத்தைச் சொல்!" என்றார்.

"அப்பா! இவ்வளவு தூரத்துக்கு வந்து விட்டபடியால் இப்போது ஒரு விஷயம் சொல்கிறேன். நம்முடைய வக்கீல் ஆத்மநாத ஐயரின் பிள்ளை பட்டாபிராமனுக்கு லலிதாவைக் கலி யாணம் பண்ணிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. போன வருஷம் நீங்கள் எல்லாரும் தேவ பட்டணத்திற்கு வந்து வக்கீல் வீட்டில் சில நாள் இருந்தீர்கள் அல்லவா? அப்போது பட்டாபி லலிதாவைப் பார்த்திருக்கிறான். லலிதாவை அவ னுக்குப் பிடித்திருக்கிறது. வேறு வரன் பார்ப்பது பற்றி அவனுக்குக் கொஞ்சம் வருத்தம். அவன் மட்டும் என்ன? வக்கீல் ஐயர்வாளுக்குக்கூடக் கொஞ்சம் வருத்தந்தான். 'நாங்கள் எல்லாம் உங்க அப்பாவுக்கு இலட் சியமா? பெரிய இடமாய்ப் பார்ப்பார்! தூரத்துப் பச்சை கண்ணுக்குக் குளிர்ச்சி!' என்று இரண்டொரு தடவை ஜாடைமாடையாகச் சொன் னார்!" என்றான் சூரியா.

"வாஸ்தவந்தான்! வக்கீல் ஆத்ம நாதய்யரின் பிள்ளை நல்ல வரன்; எனக்கு அது ஞாபகம் இல்லாமற் போகவில்லை. ஆனால் உன் அம்மா 'இன்னும் பெரிய இடமாகப் பார்க்க வேண்டும்' என்று புலம்பிக் கொண் டிருந்தாள். எனக்கென்னமோ பட் டாபிராமனுக்கு லலிதாவைக் கொடுப் பதற்குப் பூரண சம்மதம். அதைப் பற்றி யோசித்து முடிவு செய்வோம். சீதா விஷயம் என்ன சொல்கிறாய்?" என்று கிட்டாவய்யர் கேட்டார்.

"சீதா விஷயம் நாம் என்ன சொல் வதற்கு இருக்கிறது? அவளுக்கும் அத்தைக்கும் சம்மதமாயிருந்தால் சரிதான். பணங்காசு அதிகம் செல வில்லாமல் இவ்வளவு நல்ல இடம் கிடைத்தால் சந்தோஷப்பட வேண்டி யதுதானே? அதனால் நமக்கும் நல்ல பெயர் ஏற்படும்!" என்றான் சூரியா.

"அப்படியானால், சூரியா, நீதான் உன் அம்மாவிடம் விஷயத்தை எடுத் துச் சொல்லி அவளைச் சம்மதிக்கப் பண்ணவேண்டும். அவள் ஒரே பத்ர காளி அவதாரம் எடுத்திருக்கிறாள். நான் சொன்னால் தங்கை பெண்ணுக் குப் பரிந்து கொண்டு சொல்கிறேன் என்று நினைத்து இன்னும் அதிக ஆத்திரப் படுவாள்!"

"அதற்கென்ன, அப்பா! கட்டா யம் நான் அம்மாவைச் சரிக்கட்டிவிடு கிறேன்" என்றான் சூரியா.

சூரியா ஏற்றுக்கொண்ட காரியம் அவ்வளவு சுலபமாக இல்லை. ஆயி னும் கடைசியில் வெற்றி பெற்றான். முக்கியமாக, மதராஸ் 'பையனுக்கு லலிதாவைக் கொடுத்தால் அவள் டில்லி எங்கே, லாகூர் எங்கே என்று தூர தேசங்களுக்குப் போய்க் கொண் டிருக்க நேரிடும் என்றும், வக்கீல் பிள்ளைக்குக் கொடுத்தால் பக்கத்தில் இருப்பாள் என்றும், அடிக்கடி பார்த்துக் கொள்ளலாம் என்றும் சூரியா கூறியது சரஸ்வதி அம்மாளின் மனதை மாற்றி விட்டது.

• • •

மறு நாள் சாயங்காலம் எல்லா ருடைய சம்மதத்தின் பேரில் மதராஸ் பத்மாபுரம் மாஜி சப் ஜட்ஜ் பத்ம லோசன சாஸ்திரிகளின் புதல்வன் சிரஞ்சீவி சௌந்தர ராகவனுக்குப் பம்பாய் துரைசாமி ஐயர் குமாரி சீதாவைப் பாணிக்கிரகணம் செய்து கொடுப்பதாய் யதோக்தமாக அக்கிர ஹாரத்து மகா ஜனங்களின் முன் னிலையில் நிச்சயதார்த்தம் ஆயிற்று. பம்பாய் துரைசாமி ஐயர் இதற்கு ஆட்சேபம் ஒன்றும் சொல்ல மாட் டார் என்று ராஜம்மாள் சம்பந்தி களுக்கு உறுதி கூறியதின் பேரில் நிச்சயதார்த்தம் நடந்தது. இந்த நிச்சயதார்த்த வைபவத்தில் லலிதா தான் எல்லாரிலும் அதிகக் குதூகல மாக இருந்தாள். ராகவனை 'மாப் பிள்ளை' என்று கூப்பிட்டு அவனிடம் பேசக்கூட ஆரம்பித்து விட்டாள்.

சீதாவின் மனோ நிலை எப்படி இருந் தது என்பது பற்றி நாம் தற்போது ஒன்றும் சொல்லாமல் நேயர்களின் கற்பனா சக்திக்கே விட்டு விடுகிறோம்.



## இருபத்தொன்பதாம் அத்தியாயம்

# பீஹார்க் கடிதம்

கலியாணம் நிச்சயம் பண்ணிக் கொண்டு சௌந்தர ராகவன் சென்னைக்குத் திரும்பிய போது மிக உற்சாகமா யிருந்தான். தன்னுடைய வாழ்க்கையில் ஒரு புதிய ஆனந்த அத்தியாயம் ஆரம்பமாகி யிருக்கிறது என்ற எண்ணம் அவன் மனதில் குடி கொண்டிருந்தது. தாரிணிக்கும் தனக்கும் ஏற்பட்ட சிநேக சம்பந்தத்தை ஒரு மாயக் கனவு என்று தீர்மானித்து அதை மறக்கப் பிரயத்தனப் பட்டதுடன் அநேகமாக மறந்தும் விட்டான். ஆனால் அந்தச் சம்பந்தத்தை மறுபடியும் ஞாபகப்படுத்தும் இரண்டு கடிதங்கள் ராகவன் சென்னை திரும்பிய மூன்றாவது நாள் வந்தன. முதற் கடிதத்தின் மேல் உறையில் எழுதி யிருந்த விலாசக் கையெழுத்தைப் பார்த்தவுடனேயே ராகவனுக்கு அதை எழுதியது யார் என்று தெரிந்து விட்டது. முத்து முத்தான அந்த வட்ட வடிவக் கையெழுத்து தாரிணியின் கையெழுத்துத் தான். ஒரு பக்கம் அந்தக் கடிதத்தைப் பிரிக்க ஆர்வமும் இன்னொரு பக்கம் அதில் என்ன எழுதி யிருக்குமோ என்ற தயக்கமும் அவன் மனதைக் கலக்கியது. கடைசியில் பிரித்துப் பார்த்தான். கடிதத்தில் எழுதியிருந்தது பின் வருமாறு:—

முஸபர்பூர், (பீஹார்)
9—2—34

அன்பரே!

ரயிலிலிருந்து தங்களுக்கு நான் எழுதிய கடிதம் கிடைத் திருக்கலாம். அதுவே தங்களுக்கு நான் எழுதும் கடைசிக் கடிதம் என்று எண்ணியிருக்



தேன். இங்கு வந்து நிலைமையைப் பார்த்த பிறகு எதனாலோ மறுபடியும் தங்களுக்கு எழுதவேண்டும் என்று தோன்றுகிறது. எவ்வளவுதான் தங்களை நான் மறக்க முயன்றாலும் அது கைகூடவில்லை. இப்போது நான் இயற்றிவரும் தொண்டில் தங்களையும் ஈடுபடுத்த வேண்டும் என்ற ஆசை என் மனதில் பொங்கிக் கொண்டிருக்கிறது. இக் காரணங்களினாலேயே தங்களுக்குக் கடிதம் எழுதத் துணிந்தேன். இங்கே பூகம்ப நிவாரணத் தொண்டர்களின் முகாமில் எல்லாரும் தூங்கிய பிறகு நான் மட்டும் மங்கலான கிரோஸின் எண்ணெய் விளக்கின் அருகில் உட்கார்ந்து இந்தக் கடிதம் எழுதுகிறேன்.

பீஹாருக்கு நான் வந்து பத்து தினங்கள் ஆகின்றன. இந்தப் பத்து நாளும் நான் கண்ட காட்சிகள், அம்மம்மா,—ஆயிரம் வருஷம் உயிரோடிருந்தாலும் மறக்கமுடியாதவை. இந்த ஜன்மத்திலே மட்டுமல்லாமல் அடுத்த ஜன்மத்திலும் அதற்கடுத்த பல ஜன்மங்களிலுங் கூட மறக்க முடியாது என்று தோன்றுகிறது. பகலில் பார்த்த காட்சிகளை இரவில் மறுபடியும் கனவில் காண்கிறேன். பகலில் மன உறுதியினால் உணர்ச்சியை அடக்கிக் கொள்கிறேன். ஆனால் கனவில் அது சாத்தியப்படவில்லை. சில சமயம் பயங்கரத்தினால் அலறிக் கொண்டும் சில சமயம் பரிதாபத்தினால் தேம்பி அழுது கொண்டும் தூக்கத்திலிருந்து எழுந்திருக்கிறேன்.

திருஷ்டாந்தமாகச் சில சம்பவங்களைச் சொன்னால் என்னுடைய மனோநிலையைத் தாங்களும் அறிந்து கொள்வீர்கள். முஸபர்பூரில் பாபு லக்ஷ்மிநாராயண பிரஸாத் என்று ஒரு பிரமுகர். பீஹார் மாகாணத்தில் நடக்கும் கதர்த் தொண்டின் தலைவர் இவர். ஒரு மாதத்திற்கு முன்பு இம் மாகாணத்தில் உள்ள சர்க்கா சங்கக் கிளை ஸ்தாபனங்களைப் பார்வை யிடுவதற்காகப் புறப்பட்டார். ஒரு மாதப்

ஆனதும் மனைவி மக்களின் நினைவு வந்தது. ஊருக்குப் போய்ப் பார்க்க வேண்டுமென்று கிளம்பினார். வரும் வழியில் உலகம் தலைகீழாகத் திரும்புவது போன்ற அதிர்ச்சி ஏற்பட்டது. அது பூகம்ப அதிர்ச்சி என்று தெரிந்து கொண்டதும், "ஐயோ! வீட்டில் தனியாக மனைவி மக்களை விட்டு வந்தோமே! அவர்களுடைய கதி என்ன வாயிற்றோ?" என்று திடுக்கிட்டார். பதைபதைப்புடன் வீடு திரும்பினார். அவருடைய பதை பதைப்புக்குக் காரணம் இருந்தது. அவருடைய வீடு இருந்த இடத்தில் ஒரு பெரிய குப்பல் மண்ணும் கல்லும் மரத் துண்டங்களும் உடைந்த ஓடுகளும் கிடந்தன. ஆகா! அவருடைய மனைவி மக்கள் எங்கே? அலறினார்; பதறினார். மண்ணையும் கல்லையும் அப்புறப் படுத்தத் தொடங்கினார். மற்றும் பல தொண்டர்கள் அவருக்கு உதவி செய்தார்கள். ஐயோ! என்ன கோரம்! என்ன பரிதாபம்! அந்தக் குப்பலுக்கு அடியில் அவருடைய மனைவியும் குழந்தைகளும் மடிந்து நசுங்கி உருத் தெரியாத பிணங்களாகக் கிடந்தார்கள். பாபு லக்ஷ்மி நாராயண பிரஸாத் இப்போது பைத்தியம் பிடித்தவராக "என் பெண் எங்கே? பிள்ளை எங்கே?" என்று கேட்டுக் கொண்டு அங்கு மிங்கும் சுற்றி அலைந்து கொண்டிருக்கிறார்.

மாங்கீர் என்னும் பட்டணத்தில் பிரபாவதி தேவி என்று ஒரு ஸ்திரீ இருந்தாள். பாவம்! அவள் கைம் பெண்! கணவர் விட்டுப் போன சொற்ப சொத்தைக் கொண்டு குழந்தைகளைத் தைரியமாகக் காப்பாற்றி வந்தாள். கைக்குழந்தை தொட்டிலில் தூங்கியது. இன்னொரு குழந்தை கூடத்தில் விளையாடியது. பிரபாவதி சமையலறையில் சமையல் செய்து கொண்டிருந்தாள். திடீரென்று ஒரு குலுக்கல். வீடு சுழன்றது; சமையல் பாத்திரம் கவிழ்ந்தது. கொல்லைப்புறத்தில் தடதட வென்று சத்தம் கேட்டது. கொல்லைத் தாழ்வாரத்தில் கன்றுக்குட்டி கட்டி யிருந்ததை எண்ணிக்கொண்டு ஓடினாள். அவள் கொல்லைப்புறம் செல்வதற்குள் கன்றுக்குட்டி இருந்த இடத்தில் கூரை இடிந்து விழுந்து மேடு போட்டிருந்தது. இதற்குள் வீட்டின் முன் கட்டில் அதேமாதிரி சத்தம் கேட்டு ஓடினாள். இரண்டு குழந்தைகள் மேலும் வீடு இடிந்து விழுந்து அடியோடு மூடி மேடிட்டு விட்டது! "ஐயோ!" என்று அலறிக்கொண்டு பிரபாவதி வாசற் பக்கம் ஓடி வந்தாள். "என் குழந்தைகளை இழந்தேனே! பூமி வெடித்து என்னை விழுங்கி விடாதா?" என்று கதறினாள். அந்தப் பதிவிரதையின் வாக்கு உடனே பலித்தது. அவள் நின்ற இடத்தில் பூமி விரிந்து பிளந்தது. அதற்குள் விழுந்து பிரபாவதி மறைந்தாள். சீதாதேவி பிறந்த மிதிலை ராஜ்யந்தான் இப்போதைய பீஹார் என்பதை அறிந்திருப்பீர்கள். சீதையைத் தன்னிடத்தே ஏற்றுக்கொண்ட பூமாதேவி இன்று பீஹார் மாகாணத்தில் எத்தனையோ உத்தம பத்தினிகளை விழுங்கி விட்டாள்.

அன்பரே! இத்தகைய பூமிப் பிளவு ஒன்றை நான் அருகில் நெருங்கிப் பார்த்தேன். பக்கத்தி லிருந்தவர்கள் தடுத்தும் என் மனம் கேட்கவில்லை. பள்ளத்தின் ஓரமாகச் சென்று குனிந்து பார்த்தேன். பள்ளம் கீழே ஆழம் கணக்கிட முடியாதபடி அதல பாதாளம் வரையில் போகிறது. கொஞ்ச தூரத்துக்குக் கீழே ஒரே கன்னங் கரிய இருள். அதற்குக் கீழே எவ்வளவு தூரம் போகிறது என்று சொல்ல முடியாது. அதிக நேரம் உற்றுப் பார்த்தால் மயக்கம் வந்து தலை சுற்றுகிறது.

பூகம்பம் இன்னும் எத்தனையோ விசித்திரங்களை யெல்லாம் இங்கே உண்டாக்கி யிருக்கிறது. மேட்டுப் பிரதேசங்கள் திடீரென்று பள்ளமாகிப் பெரிய ஏரிகளைப் போல் தண்ணீர் ததும்பி நிற்கின்றன. ஏரிகள் இருந்த இடத்தில் தண்ணீர் அடியோடு வற்றிப் போயிருக்கிறது.

குடிசைகளும் வீடுகளும் பிரம்மாண்டமான மாளிகைகளும் கம்பெனிக் கட்டிடங்களும் ரயில்வே ஸ்டேஷன்களும் இடிந்தும் விழுந்தும் எரிந்தும் கிடக்கின்றன.

மொத்தம் 25,000 ஜனங்கள் பூகம்பத்தில் மாண்டிருக்கலாம் என்ற

மதிப்பிட் டிருக்கிறார்கள். மாண்டவர்கள் அதிர்ஷ்டசாலிகள். தப்பிப் பிழைத்தவர்களில் லட்சக் கணக்கான ஜனங்கள் உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றி, தலைக்கு மேலே கூரையின்றி, உட்காரவும் இடமின்றித் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். சிலர் சொத்து சுதந்திரங்களை அடியோடு இழந்து விட்டிருக்கிறார்கள்.

அன்பரே! இதையெல்லாம் தாங்கள் வந்து பார்த்தீர்களானால் இப்படிப்பட்ட மகத்தான துரதிர்ஷ்டத்தையடைந்த ஜனங்களுக்குத் தொண்டு செய்வதைக் காட்டிலும் வாழ்க்கையில் வேறு என்ன பெரிய காரியம் இருக்க முடியும் என்ற முடிவுக்குத்தான் வருவீர்கள்.

பூகம்பத்தினால் ஏற்பட்ட கஷ்ட நிவாரண தொண்டுக்காக இந்தியாவின் நாலு பக்கங்களிலும் தொண்டர்கள் வந்திருக்கிறார்கள். எல்லாரும் பாபு ராஜேந்திர பிரஸாத்தின் தலைமையில் வேலை செய்கிறார்கள். ஆ! பாபு ராஜேந்திர பிரஸாத் ஒரு அற்புத மனிதர். அவருடைய சாந்தம், அடக்கம், அன்பு, தொண்டு செய்யும் ஆர்வம் — இவற்றுக்கு நிகரேயில்லை.

ஒரு வாரத்துக்கு முன்னால் பண்டித ஜவாஹர்லால் நேரு இங்கே வந்தார். நாம் இருவரும் முதல் முதலில் சந்தித்தோமே, கராச்சி நகரில்; அங்கே நடந்த காங்கிரஸில் பண்டித ஜவாஹர்லால் நேருவை நான் பார்த்தேன். அதற்கு முன்பும் பார்த்திருக்கிறேன். ஆனால் அவர் இப்பேர்ப்பட்ட மகா புருஷர் என்று அறிந்து கொள்ளவில்லை. மாபெருந் தலைவர் தாம் என்கிற உணர்ச்சியேயில்லாமல் தொண்டர்களோடு தொண்டர்களாகப் பணியாற்றுகிறார். ஆகா! என்ன ஆர்வம்? என்ன அவசரம்? எத்தனை சுரு சுருப்பு? அவர் நடப்பதே கிடையாது. ஒரே ஓட்டந்தான்.

நேற்று ஒரு அபூர்வ சம்பவம் நடந்தது. பூகம்பத்தினால் இடிந்து விழுந்து நாசமான ஒரு தெருவின் வழியாக நேருஜி போய்க் கொண்டிருந்தார். திடீரென்று ஒரு தீனமான சத்தம் கேட்டது. நாய்க்குட்டி குரைக்கும் குரல்போலிருந்தது. நேருஜி அங்கேயே நின்று உற்றுக் கேட்டார். மறுபடியும் அதே குரல் கேட்டது. உடனே நேருஜி சத்தம் வந்த திசையை நோக்கி ஓடினார். இடிந்து விழுந்து மேடிட்டுக் கிடந்த கல்லையும் மண்ணையும் அப்புறப் படுத்தத் தொடங்கினார். அவரைப் பின்பற்றி மற்றத் தொண்டர்களும் சுரு சுருப்பாக வேலை செய்தார்கள். அரை மணி நேர வேலைக்குப் பிறகு அவர்கள் தேடிய காட்சி தென்பட்டது. மர விட்டங்கள் ஒன்றன்மேல் ஒன்றாக விழுந்து ஒரு சிறு கூரையைப் போலாகிக் கீழே காலி இடம் உண்டுபண்ணியிருந்தது. அந்த இடத்தில் பாவம்! ஒரு சிறுவன் இறந்து கிடந்தான். இறந்த குழந்தையைக் காத்துக்கொண்டு அந்த நாய் இருந்தது. இத்தனை நாளும் அது எப்படித்தான் உயிர் வைத்திருந்ததோ தெரியாது! மேலே மூடியிருந்தவற்றை எடுத்தவுடனே நாய் வெளியே ஓடி வர வேண்டுமே! கிடையாது! செத்துக் கிடந்த சிறுவனை முகர்ந்து பார்த்துக் கொண்டு அங்கேயே நின்றது.

கடவுளே! இந்த மாதிரி எத்தனையோ பயங்கர சம்பவங்கள். இவற்றையெல்லாம் பார்த்த பிறகு உலகத்து நாடோடி வாழ்க்கையில் யாருக்குத்தான் மனம் செல்லும்! மனித வாழ்க்கை எடுத்ததின் பயன் இம்மாதிரி கஷ்டப் படுகிறவர்களுக்குச் சேவை புரிவதைத் தவிர வேறு என்ன இருக்க முடியும்? தாங்களும் இங்கு வந்து பார்த்தால் என்னைப் போலவேதான் எண்ணுவீர்கள். ஏற்கெனவே எத்தனையோ விஷயங்களில் நம்முடைய அபிப்பிராயங்கள் ஒத்திருந்தன அல்லவா? சர்க்கார் உத்தியோகம், பெரிய சம்பளம், சௌக்கியமான பங்களா வாழ்வு, மோட்டார்கள், டீ பார்ட்டிகள் — இவற்றில் எல்லாம் என்ன சுகம் இருக்கிறது?

இங்ஙனம்,

**தாரிணி.**

**குறிப்பு**:—மேலே நான் எழுதியிருப்பதில் ஏதாவது அதிகப் பிரசங்கம் என்று தோன்றினால் தயவு செய்து மன்னிக்கக் கோருகிறேன்.

# வட்ட மேஜை

பெனிஸ்டோன், யார்க்ஷயர்,
இங்கிலாந்து, 20—6—48

## கலைச் செல்வம்

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

இப்பொழுது நம் கலாசாலைகளில் தாய் மொழியில்தான் பாடங்களைக் கற்பிக்க வேண்டும், தாய் மொழிக்குத்தான் பிரதான ஸ்தானம் அளிக்க வேண்டும் என்று வற்புறுத்தி வருவதற்குப் பலர் பல காரணங்களைக் கூறலாம். சிலர் பிற பாஷைமேல் துவேஷத்தின் காரணமாகவே நாம் தாய் மொழிக்குப் பிரதானம் கொடுக்க வேண்டும் என்றும், இன்னும் சிலர் அன்னிய பாஷையில் பேசுவதாலேயே நம்மை அன்னியர் அடிமைப் படுத்த ஏதுவாகிறது என்றும் கருதலாம். மக்கள் ஒருவருக்கொருவர் தத்தம் எண்ணங்களை வெளியிடவே பாஷை உண்டாக்கப்பட்டது. பல இடங்களில் வசிக்கும் ஜனங்கள் பலவகையாகப் பேசி வருகின்றனர். அதனால்தான் நம்மிடையே பல பாஷைகள் வழங்குகின்றன.

பாஷையை நாளுக்கு நாள் வளர்த்து வந்து பல இலக்கியங்களை இயற்றியதன் மூலம் மனிதன் ஆத்ம திருப்தியடைய முடிகிறது. ஆத்ம திருப்திக்குக் காரணமாயுள்ள மற்றொன்று பொருளாதாரம். பொருள் உற்பத்தியை அதிகப்படுத்த நூதன உற்பத்தி முறைகளைக் கற்கவேண்டி இருக்கிறது. இவைகளை ஒரு பாஷையின் மூலம் விரைவில் கற்கலாம். நாம் அனுதினமும் பிறந்தகத்தில் இருந்து, பேசிப் பழகிவரும் பாஷையில் கற்பது மிகச் சுலபம். ஏன் எனில் இக்காரணம் பொருட்டு அன்னிய பாஷையைக் கற்று அதில் தேர்ச்சி பெறப் பலகாலம் வீணில் செலவாகிறது. இதைத் தடுப்பதற்கு நாம் நமது தாய்பாஷையிலேயே சகல சாஸ்திரங்களையும் கற்பது மிகவும் அவசியம்.

இத்துறையில் நாம் சிலசமயம் அன்னிய வார்த்தைகளை உபயோகிப்பதை ஆட்சேபிக்கலாகாது. தாய் மொழியில் வழங்கப்படாததும், அன்னிய மொழியில் சிலகாலம் சிலரிடையே வழங்கப்பட்டும் வரும் பதங்களைக் கூச்சமின்றி அப்படியே நம் மொழியில் கலப்பதுதான் சிறந்தது. இதனால் நாம் செய்ய வேண்டிய மொழி பெயர்ப்புகளைச் சீக்கிரம் செய்து முடிப்பதுடன் சில விபரீத பதங்களை உபயோகிப்பதையும் தடுக்கலாம். உதாரணமாக நாம் கூறும் புகைப் படத்துக்கும் புகைக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது? இதைப் படிக்கும் குழந்தைகள் தப்பிதமான கற்பனையைச் செய்து கொள்ள ஏதுவாகிறது. தவறான கற்பனைகளைச் செய்ய இடமளிப்பதைக் காட்டிலும் கற்பனைக்கே இடம் கொடாமை மேல். ஆகையால் நம் மொழியில் வழங்கப்படாத புதிய வார்த்தைகளுக்கு ஏற்ற காரணப்பெயர்கள் இல்லை எனில் அவைகளை பிறபாஷைப் பெயரிலேயே வழங்குவது நலம்.

தாய் மொழியில் பல சாஸ்திரங்களும் மொழி பெயர்க்கப்பட்டு, அவைகள் எளிய நடையில் எழுதிய புஸ்தகங்களாக வழங்கப் படுமாயின், பல தொழில்களில் ஈடுபட்டுள்ள நம்மவர்கள் தத்தம் தொழிலில் வெகு விரைவில் அபிவிருத்தியடைய ஏதுவாகும்.

ஆங்கில நாட்டிலுள்ள தொழிலாளிகளிடையே நான் இரண்டு வருஷ காலமாகப் பழகி வருவதன்மூலம் இதன் உண்மை நன்கு புலப்பட்டது.

சி. ஏ. ராமகிருஷ்ணன்.

திருவனந்தபுரம்
31—5—48

## திருவாங்கூர்த் தமிழர்கள்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

பத்து லட்சம் தமிழர்கள் வசிக்கும் திருவாங்கூரில், நாகர்கோவிலைத் தவிர வேறு ஒரு ஊரிலும் ஒரு தமிழ்ப் பள்ளிக்கூடமோ, கல்லூரியோ கிடையாது. திருவனந்தபுரம் முழுவதும் சுற்றிப் பார்த்தால், ஒரு கிராமத்து மூலையில், 5-வது வகுப்பு வரையிலும் படிப்பதற்கு ஒரு தமிழ்ப்பாடசாலை இருக்கிறது. நான்காவது வகுப்பு வரையிலும் அந்தப் பாடசாலையில் படித்து விட்டு வெளி வந்த தமிழ் மாணவ மாணவிகளுக்கு, மேல் படிப்பு படிப்பதற்கு வேறு ஒரு தமிழ்ப் பள்ளிக்கூடம் கூடக் கிடையாததினால் அவர்கள் ஏதாவது ஒரு மலையாளப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படிக்கிறார்கள். மலையாளப் பள்ளிக் கூடங்களில் கணிதம், பூகோளம், விஞ்ஞானம் முதலிய பாடங்கள் மலையாளத்தில் கற்பிக்கப் படும். மலையாளத்தில் கற்பிக்கப்படும் பாடங்கள் தமிழ் மாணவர்களுக்குப் புரியாது. அந்தப் பாடங்களைத் தமிழில் கற்பிக்கத் தமிழாசிரியர்களும் கிடையாது.

இவ்விதக் கஷ்டங்களினாலும், நாகர்கோவிலைத் தவிர ஏனைய இடங்களில் உள்ள பள்ளிக் கூடங்களில் தமிழ் என்ற நாமதேயமே கிடையாததினாலும், இந்நாட்டுத் தமிழ் மக்களில் பெரும்பான்மையோர் தங்கள் குழந்தைகளை ஆரம்பமுதல் மலையாளப் பள்ளிக்கூடங்களில் சேர்த்து விடுகின்றனர். ஆயிரக்கணக்கான தமிழ் மாணவ மாணவிகள் மலையாளம் படிக்கின்றனர். தமிழ் படிக்கும் மாணவ மாணவிகளின் எண்ணிக்கை வருடந்தோறும் குறைந்து கொண்டே வருகிறது.

லட்சக்கணக்காகத் தமிழர்கள் வசிக்கும் இந்நாட்டில், தமிழர்கள் தங்கள் தாய் பாஷையாகிய தமிழைக் கூடக் கற்க முடியாமல் வேறு பாஷையைக் கற்க வேண்டி யிருப்பது மிகவும் வருந்தத் தக்கது.

எஸ். சரஸ்வதி.

அண்ணாமலைநகர்
15—6—48.

## சீபார்க மயம் ஜகத்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

சென்ற வாரக் கல்கி இதழில் வெளியான 'படிப்பதற்கு ஓர் இடம்' என்ற தலையங்கத்தைப் படித்தேன். ''சர்வமும் சீபார்க மயம் ஜகத்'' என்று தாங்கள் எழுதியிருப்பது நூற்றுக்கு நூறு உண்மை. பிறக்கும்போதே கல்லூரிகளில் செல்வாக் குடையவர்களின்

சுற்றத்தாராகப் பிறந்திருந்தால்தான் கல்லூரியில் சேர்ந்து படிக்க முடிகிறது. சில கல்லூரிகளில் குறிப்பிட்ட சில பெரிய மனிதர்களுடைய சிபார்சுக்கு இத்தனை இடங்கள் உண்டு என்று ரிசர்வ் செய்து வைத்திருக்கிறார்களாம். சிபார்சுக்குத்தான் இடம் கொடுக்கிறார்களென்றாலும் அதைப் பட்டவர்த்தனமாக விளம்பரமுமா செய்யவேண்டும்? உதாரணமாகக் கிறிஸ்டியன் காலேஜ் பிராஸ்பெக்டஸில் "சிபாரிசுகளைக் கடித மூலம் அனுப்பவேண்டும். அவைகள் ஜாக்கிரதையாகக் கவனிக்கப்படும்" (Recommendations should be sent by letter, and will receive careful consideration) என்று கொட்டை எழுத்துக்களிலே அச்சடித்திருக்கிறார்கள். இது கல்வி மந்திரியின் கண்களை உறுத்தவில்லையா? ஆகா! அந்த சிபார்சுக்குத்தான் எவ்வளவு மதிப்பு! மேல் கண்ட விளம்பரம், "செல்வாக்குடையவர்களின் சுற்றத்தவர்களாகப் பிறந்தவர்கள்தான் கல்லூரிகளில் சேரத் தகுதி வாய்ந்தவர்கள். மற்ற மாணவர்கள் கல்லூரிப் படிப்புக்கு தகுதியற்றவர்கள்" என்று பறை சாற்றுவது போலிருக்கிறது.

சு. ப. முத்து.

ஜி. டி. சென்னை
8—6—48

## பம்பாயைப் பின்பற்றவும்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

சமீபத்தில் பம்பாய் சட்டசபைக் காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் பம்பாய் ரெவின்யூ மந்திரி மொரார்ஜி தேசாய், பம்பாய் மாகாண சர்க்கார் கொண்டு வரப்போகும் ஒரு முக்கிய மசோதாவைப் பற்றி விவரித்தார். இம்மசோதாவின்படி யாரும் ஐம்பது ஏக்கருக்கு மேல் நிலம் வைத்துக் கொள்ளக் கூடாது என்றும் ஆனால் ஆறு வருஷத்திற்கு மேல் உழுது பயிரிடுபவர்கள் ஐம்பது ஏக்கருக்கு மேல் நிலம் வைத்துக் கொள்ளலாம் என்றும் ஆகிறது. இவ்வளவு பெரிய புரட்சிகரமான திட்டத்தைப் பம்பாய் சர்க்கார் கொண்டு வருவது மிகவும் போற்றத் தக்கது.

இவ்விஷயத்தில் பம்பாய் சர்க்காரை, நம் மாகாணமும் பின் பற்ற வேண்டும். தென்னாட்டில் எத்தனையோ முதலாளிகள் நூறு வேலி முதல் ஆயிரம் வேலிக்கும் மேற்பட்ட நிலங்களை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஒருவருக்கும் உபயோக மில்லாத அளவுக்கு மீறிய இந்நிலங்கள் அவர்களுக்கு அநாவசியம். அவர்களுடைய நிலத்தில் பாடுபட்டு, நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைக்கும் குடியானவன் கதி 'கஞ்சி குடிக்க உப்பில்லை' என்ற ஸ்திதியில் இருக்கிறது. அவர்களிடத்தில் வேலை பார்க்கும் பண்ணை ஆட்களுக்குச் சரிவர சம்பளம் கொடுக்கப் படுவதில்லை. எனக்குத் தெரிந்த ஒரு பண்ணையில், நூறு வேலி நிலங்களை மேற்பார்வையிட்டு, அவைகளைச் சரிவர கவனித்து, கணக்கு எழுதும் உத்தியோகஸ்தருக்கு (இவருக்கு ஒரு நாள் 24 மணி நேரமும் வேலை நேரம். பண்ணையின் உத்தியோகஸ்தருள் பெரியவர்) ஒரு மாதச் சம்பளம் நான்கு கலம் நெல்லும் நான்கு ரூபாய் பணமும். இந்த அழகான சம்பளமும் காலகாலத்தில் கிடைப்பதில்லை.

இது தவிர, மடாதிபதிகள் பலர் மனம் போன போக்கெல்லாம் பணத்தைக் கண்ட வழிகளில் வாரி இறைத்து வருகிறார்கள். ஒவ்வொரு ஆதீனத்துக்கும் ஆயிரக்கணக்கான வேலி நிலம் சொத்து இருக்கிறது. ஆனால் அவைகளால் யாருக்கும் பயன்? பட்டினியால் ஜனங்கள் ஒரு புறம் வாடும் போது இவர்கள் மற்றொரு புறம் களிநடம் புரிகிறார்கள்.

நம் மாகாண சர்க்கார் இவ்விஷயத்தில் பம்பாயைப் பின்பற்றினால் நலம்.

வை. வெங்கடராமன்.

கோட்டாறு
23—10—48

## நெசவுத்தொழிலாளர் கஷ்டம்

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

ரயில்வேத் தொழிலாளிகளின் 'ஸ்ட்ரைக்' என்னும் இடி நெசவுத் தொழிலாளியின் தலையில் விழுகிறது. ரயில்வேக் கம்பெனிகளில் சரியாகப் பார்சல் புக்கிங் ஆவதில்லை. இதனால் சகல பொருள்களுமே ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்குப் போக முடியவில்லை. இதனால் நாகர்கோவில், வடசேரி, கோட்டாறு முதலிய இடங்களில் நூல் சரியாகக் கிடைப்பதில்லை. முதலாளிகளோ ஸ்டாக் உள்ள நூல்களை அதிக விலைக்கு விற்கின்றனர். ஒரு நெசவுத் தொழிலாளி நூலை அதிக விலை கொடுத்து வாங்கி அதை நெய்து விற்பாரேயானால், அவனுக்குத் துணி சரியான விலைக்கும் போவதில்லை. குறைந்த விலைக்கு விற்றாலோ அவன் கூலியில் பிடிக்கும். இந்த நிலைமையில் நெசவுத் தொழிலாளிகள் மிகவும் கஷ்டப்படுகின்றனர். அவர்களுக்குச் சரியான உணவு கிடைப்பதில்லை. இந்த சொற்பக் கூலியில் அவர்கள் வாழ்க்கை நடத்துவது மிகவும் கஷ்டம். இன்று வரை, மதுரை முதலிய இடங்களுக்கு நெசவுத் தொழில் செய்து பிழைக்கச் சென்ற ஜனங்களின் தொகை எவ்வளவு என்று சொல்ல முடியாது. இவ்வளவு நெருக்கடிக்கும் காரணம் ரயில்வே ஸ்ட்ரைக்கே யாகும். ஒரு தொழிலாளி தனது சொந்த நன்மைக்காக ஸ்ட்ரைக் செய்யும்போது மற்றவர்களுக்கு உண்டாகும் தீமைகளை உணர வேண்டும். அப்படி உணராதவன் ஒரு தொழிலாளியாக இருக்க முடியாது.

எஸ். என். கிருஷ்ணன்.

நாமல்
14—5—48

## கண்ட்ரோல் மகிமை

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

நான் ஒரு கிராமவாசி. எனக்கு ஒரு வீடு இருக்கிறது. அதனுடைய தாய்ச்சுவர் பின்னப்பட்டு இன்றோ நாளையோ என்னும் நிலைமையில் விழுந்து விடும்போல் இருக்கிறது. அதை ரிப்பேர் செய்வதற்காகச் சென்னை மவுண்ட்ரோடிலிருக்கும் சிமிட்டி கண்ட்ரோல் ஆபீஸிற்கு பிப்ரவரி மாதம் 20 மூட்டை சிமிட்டிக்குப் பர்மிட் வேண்டும் என்று மனுச் செய்து கொண்டேன். ஏப்ரல் மாதம் வரையில் ஒன்றும் பதில் வராததினால் ஒரு ஞாபகத்தாள் (Reminder) அனுப்பினேன். 20 மூட்டைக்குப் பதிலாக எட்டு மூட்டைக்கு எனக்கு பர்மிட் கிடைத்தது. "சுவாமி வரம் கொடுத்தாலும் பூசாரி வரம் கொடுக்க வேண்டும்" என்னும் பழமொழிக் கிணங்க, சிமிட்டி ஸ்டாக்கிஸ்ட் இந்தப் பர்மிட்டுக்கு சிமிட்டி இல்லை என்று சொல்லி விட்டார். மறுபடி

வும் சிமிட்டி கண்ட்ரோல் ஆபீஸிற்கும், சென்னை மராமத்து இலாகா அமைச்சருக்கும் மனுச் செய்து கொண்டேன். இது வரையில் பதில் இல்லை. பொதுஜன சர்க்கார் என்று சொல்லிக் கொள்ளும் காங்கிரஸ் சர்க்கார் ஏழை ஜனங்களின் சௌகரியங்களைக் கவனிக்க வேண்டும். உண்டு அல்லது இல்லை என்று பதில் சொல்ல வேண்டுமே தவிர இப்படி வாய் மூடித்தனமாக இருக்கக் கூடாது. சிமிட்டி வரும் வரும் என்று கவர் முன்னே உட்கார்ந்து கொண்டு கண்ணைச் சிமிட்டிக் கொண்டு இருக்க வேண்டுமா, அல்லது நாலு மாதத்திற்கு முன்பு உங்கள் இதழில் வெளிவந்த ''வாழ்க குதிரைப் பந்தயம் வீழ்க விவசாயம்'' கட்டுரையைப் போல் கைவிட்டு விட வேண்டியதுதானா?

நா. வி. ஸ்ரீ. ராகவன்.

அம்பாசமுத்திரம்
7—6—48

## சர்க்கார் கவனிக்குமா?

''கல்கி'' ஆசிரியர் அவர்களுக்கு,

சென்ற இதழ் ''கல்கி''யில், தாங்கள் சினிமாக் கொட்டகைகளில் சிலர் நடத்திவரும் அட்டூழியங்களைப்பற்றி எழுதியிருக்கிறீர்கள். இதைப்பற்றி இன்னும் சில விஷயங்களைக் கூற விரும்புகிறேன்.

''மொத்தம் நூற்றைம்பது டிக்கட் கொடுக்க வேண்டிய இடத்தில், ஐம்பது டிக்கட்தான் கொடுக்கிறார்கள்'' என்று தாங்கள் குறிப்பிட்டிருப்பதைப் பார்த்தவுடன் எனக்கு ஆச்சரியமாயிருந்தது. ஏனெனில், இந்த ஐம்பதிலும் ஒரே ஒரு பகுதிதான் நியாயமான விலைக்கு வாங்கப்படுகிறது. சில தெருத் திண்டாடிகள் இடித்துக் கொண்டும் ஆர்ப்பாட்டம் செய்துகொண்டும் 'க்யூ' வரிசையில் நின்று விடுகிறார்கள். இவர்களுக்குத் தான் பாதி டிக்கட்டுகளும் போகின்றன. டிக்கட் விற்பனை முடிந்தவுடன் உள்ளே சென்று பார்த்தால், பாதிக்குமேல் இடம் காலியாய் இருக்கும். வெளியில் கவனித்தால் உள்ளங் கையில் டிக்கட்டுடன் சில நபர்கள் பேரம் பேசுவதைப் பார்க்கலாம்.

'க்யூ' வரிசையிலாவது ஏதாவது ஒழுங்கு முறை கையாளப்படுகிறதா என்றால் அதுவும் இல்லை. கருப்பு மார்க்கட் விற்பனையாளர்கள் தங்களுக்கு வேண்டியவர்களைக் 'க்யூ'வில் முன்னும் பின்னும் நுழைத்துக் கொள்ளுகிறார்கள். கேட்டால் சோடாக் குடிக்கச் சென்றதாய்ச் சாக்குச் சொல்லி விடுகிறார்கள்.

சில சினிமாக் கொட்டகைக்காரர்கள் ''இப்படம் இன்றே கடைசி'' என்ற போர்டை ஒருவாரமாகத் தொங்கவிட்டுக் கொள்ளை வசூல் செய்கிறார்கள்.

கொட்டகையில் உள்ள நாற்காலிகளைப் பற்றிக் கூறும்போது நாம் படும் அவஸ்தை டிக்கட் எடுப்பதோடு நின்று விடவில்லை என்று தோன்றுகிறது. 'நிமிஷத்திற்கு ஒரு தரம் ஜனனஞ்செய்யும் சக்தி வாய்ந்த மூட்டைப் பூச்சிகளை எங்கிருந்துதான் சினிமாச் சொந்தக்காரர்கள் பிடித்தார்களோ?' எனத் தோன்றும்.

இந்தக் கஷ்டங்களிலும் ஒருவன் கவலையாய்ச் சினிமா பார்ப்பது அபூர்வம். மிகச் சுலபமான வழி யாதெனில், கையில் நிறையப் பணத்துடன் சென்று கருப்பு மார்க்கட்டிற்குள் புகுந்து வேண்டிய டிக்கட் பெற்று, பையிலிருந்து 'பிளிட்' பொடியை நாற்காலியில் கொட்டி, விசிறியை வைத்துக் கொண்டு வியர்வையை விரட்டுவதே யாகும். இந்தக் கண்ராவியைத் தடுக்க சர்க்கார் காலாகாலத்தில் தக்க வழி தேடுவார்கள் என நம்புகிறேன்.

வா. சேஷாத்திரி.

வல்லம்படுகை
15—6—48

## என்ன அவசரம்?

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

இந்த வருஷம் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை முடிவு அமோகமாயிருந்தது. ஆனால் அதற்கப்புறம் வந்த திருத்தங்கள் தான் விரசப்படுத்தி விட்டது.

புதிதாகச் சேர்க்க வேண்டிய நம்பர்கள் என்றும், தப்பிதமாகப் பிரசுரிக்கப்பட்ட நம்பர்கள் என்றும், இது வரையும் இரண்டு தடவைகள் வந்து விட்டன. இன்னும் எத்தனை தடவைகள் வருமோ? இதனால் எத்தனை மாணவ மாணவிகளின் மனம் அல்லோல கல்லோலப் பட்டிருக்கும்?

இன்றைக்குத் தேறினவன் நாளைக்குத் தேறவில்லை என்றால் எப்படியிருக்கும்! அது மாதிரி இன்றைக்குத் தேறவில்லை என்று மனங்குன்றி பித்துப் பிடித்தவன் போலானவன் மறு நாள் தேறி விட்டான் என்றாலும் அதில் அவனுக்குப் பூரண சந்தோஷம் எங்கிருக்கப் போகிறது!

திருத்தம் என்பது வெகு அபூர்வமாக இருக்க வேண்டும். அதுவும் இது மாதிரியான மிக முக்கியமான விஷயத்தில் என்ன அவசரம்? ஆற அமர இன்னும் ஒரு வாரம் தள்ளி, திருத்தத்திற்கிடமில்லாமல் பரீட்சை முடிவு சொல்லியிருக்கலாமே!

சம்பந்தம்.

எப்போதும்வென்றான்
11—6—48

## பாரதி தினம்

''கல்கி'' ஆசிரியர் அவர்களுக்கு,

சமீபத்தில் மேற்கு வங்க சர்க்கார் கவி ரவீந்திரநாத் டாகூரின் பிறந்த தினத்தைச் சிறப்பாகக் கொண்டாடி, மாகாணம் முழுவதும் சர்க்கார் விடுமுறை தினம் என்று அறிவித்திருந்தனர். அம்மாதிரியே சென்னை சர்க்காரும் இவ்வருடம் செப்டம்பர் மாதம் 11-ம் தேதி ''பாரதி தினத்தை''ச் சிறப்பாகக் கொண்டாடி, சர்க்கார் விடுமுறை தினமும் கொடுத்து மகாகவி பாரதியைக் கௌரவிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.

சு. மந்திரம்.

தூத்துக்குடி
22—6—48

## இரண்டு சிம்மாசனங்கள்

''கல்கி'' ஆசிரியர் அவர்களுக்கு,

'நாட்டுக்கொரு புதல்வர்' ராஜாஜி அவர்கள் கவர்னர்-ஜெனரலான வைபவ வர்ணனையை, தாங்கள் டெல்லி ரேடியோ நிலையத்திலிருந்து, அன்று மாலையில் நிகழ்த்

★ இந்த இதழில் வெளியாகியிருக்கும் வட்ட மேஜைக் கடிதங்களில், இவ்வாரத்து ஸ்ரீ கே. எ. ராமகிருஷ்ணன் எழுதியிருக்கும் கடிதத்துக்கு ரூ. 25 பரிசளிக்கப்பட்டது.

திய சொற்பொழிவைக் கேட்க நேரிட்டது. நிகழ்ச்சி நடந்தது பதினைந்து நிமிஷமே யானாலும் வெகு நன்றாக இருந்தது. தாங்கள் அந்த வைபவத்தை வர்ணித்துக் கொண்டு வரும்பொழுது, இடை இடையே, தர்பார் மண்டபத்தில் இசைத்த பின்னணி வாத்ய சங்கீதத்தையும், ராஜாஜி அவர்கள் நிகழ்த்திய அழகான, தெளிவான சொற்பொழிவின் சிறிய பாகத்தையும் ஒலிபரப்பியது மிக ரஸமாக இருந்தது. தங்களுடைய ரேடியோ சொற்பொழிவைக் கேட்டவர்கள், கடைசியில் தாங்கள் சொன்னதை மறக்கவே முடியாது. "தர்பார் மண்டபத்தில் இரண்டு சிம்மாசனங்கள் இருந்தன. அவைகளில், ஒன்றில் நம் ராஜாஜி வீற்றிருந்தார். மற்றொரு சிம்மாசனம் காலியாகத்தான் இருந்தது. ஆனால் என் மனக் கண்முன், மகாத்மா காந்திஜி அமர்ந்திருந்து, அவ்வைபவத்தை ஆசீர்வதிப்பது போல் தோன்றியது" என்றீர்கள். முற்றிலும் உண்மை. மகாத்மாவின் ஆத்மா நிச்சயமாக அவ்வைபவத்தை ஆசீர்வதித்தே இருக்கும்.

ரெ. ராஜாராம்.

திருப்பணிப்பேட்டை
22—6—48

## உலகறிந்த உண்மை

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

தாங்கள் 20—6—48ல் வெளியிட்டுள்ள ராஜாஜி மலரைக் கண்டு பெருமகிழ்ச்சி அடைந்தேன். தமிழ்நாட்டில் பிறந்த தமிழ் அறிவாளி, ராஜாஜி சுதந்திர இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரலாக நியமிக்கப் பட்டுள்ளார்.

அப்பதவிக்குரிய ஆழ்ந்த அறிவும் ஆற்றலும் ஒருங்கே தம்பாட்டுத் திறம்படப் பெற்றவர் ராஜாஜி என்பது உலகறிந்த உண்மை. ராஜாஜியைச் சுதந்திர இந்தியாவுக்ு அளித்த தமிழ்நாடு வாழ்க, வாழ்க!

சா. குஞ்சிதபாதம்.

கொழும்பு
25—6—48

## பதவிக்கே கௌரவம்

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு

தங்கள் 'ராஜாஜி மலர்' எதிர்பார்த்தது போல் மிகவும் நன்றாக இருக்கிறது. நமது ராஜாஜி அவர்கள் பல பெரிய பதவிகளுக்கும் புது கௌரவம் அளித்து வருகிறார்கள். 'அதவிக்கு வேந்தனும் துரும்பு.' எவ்வளவு பெரிய பதவியும் ராஜாஜி அவர்களுக்குப் பெரிதல்ல.

ராஜாஜி அவர்களை உலகம் சரியானபடி மதித்து மரியாதை செய்து, அவர்களுடைய திறமையைப் பயன்படுத்திக் கொள்ளவில்லையென்பது என் மனவருத்தமாக இருந்து வந்தது. இது விஷயமாக இப்போது மனத் திருப்தி ஏற்பட்டிருக்கிறது.

ராஜாஜி அவர்கள் தலைவர்களுக்குள் தலைவர். மானிடர்களில் மாணிக்கம். மகாத்மா காந்தி, ராஜாஜி போன்றவர்களை அடிக்கடி உலகில் காணமுடியாது.

தாங்களும் ராஜாஜியும், பல்லாண்டு வாழ்ந்து, பல முறையில் உலகத்துக்கு நன்மை செய்ய வேண்டுமென்று இறைவனை வேண்டுகிறேன்.

டி. எஸ். சுந்தரேசன்.

[இன்னும் பல அன்பர்கள் "கல்கி" ராஜாஜி மலரைக் குறித்துத் தங்கள் பெருமித மகிழ்ச்சியைத் தெரிவித்திருக்கிறார்கள். அவர்கள் எல்லாருக்கும் நமது மனமார்ந்த நன்றி. —ஆசிரியர்]

★ ★ ★ நம் கல்வி முறையைப்பற்றிப் "பெற்றோன்" எழுதி வரும் கட்டுரைகள் ஆசிரியர் குழாத்தில் ஒருவருடைய கவனத்தையேனும் கவர்ந்திருக்கின்றது என்பதை அறிந்து மிகவும் மகிழ்கிறோம். அலகாபாத் யுனிவர்ஸிடி புரொபஸரும் எம். ஏ., எம். எல். பட்டதாரியும் பரீட்சாதிகாரியுமான ஆசிரியர் கே. ஆர். ஆர். சாஸ்திரி அவர்கள் எழுதியுள்ள அருமையான கட்டுரையைப் படியுங்கள்.

# பரீட்சை என்னும் பாதகம்


ஆசிரியர் கே. ஆர். ஆர். சாஸ்திரி, எம். ஏ., எம். எல்.
அலகாபாத் சர்வகலாசாலை


**பரீ**ட்சை திருத்தும் வேலையைப் பன்னிரெண்டு வருஷமாய்ச் செய்கிற ஒரு பிரகிருதி நான். இங்கு சட்டப் பரீக்ஷைகளில் நூற்றுக்குத் தொண்ணூறு, எண்பது இம்மாதிரி சாதாரணமாகப் பாஸ் செய்கிறார்கள். புத்திசாலித்தனத்திலோ அல்லது திறமையிலோ அலகாபாத் சர்வகலாசாலை மாணவ மாணவிகளை விடச் சென்னையிலுள்ளோர் ஒரு விதத்திலும் கீழ்ப்பட்டவர்களில்லை. சென்னையில் இருபத்தோரு வருஷங்களுக்கு முன் நூற்றுக்குப் பதினாறு பேர் பி.எல். பரீட்சையில் பாஸ் செய்தார்கள். காலஞ்சென்ற திவான்பகதூர் டி. ரங்காச்சாரியார் தலைமையில் மாணவர்கள் கிளர்ச்சி செய்தார்கள். ஆனால் செப்பாக்கம் கோட்டை அசையவில்லை! ஸெயின்ட் ஜார்ஜ் கோட்டையில் நம் ஸ்ரீ அவிநாசிலிங்கம் செட்டியார் போன்ற தியாகிகள் தேசக் கொடியை காட்டியாகிவிட்டது. ஆனால் செப்பாக்கம் கோட்டையில் ஏதாவது மாறுதல் உண்டா? — என்பதுதான் கேள்வி.

## பரீட்சையின் மர்மம்!

**சா**தாரணமாக எப்பொழுதுமே இருபத்தொன்பது மொத்தம் வந்தவுடன் அதை முப்பதாக்குவதே வெகு பரீட்சாதிகாரிகளின் மனப் போக்கு. ஏனெனில் இருபதுக்கும் முப்பதுக்கும் வித்தியாசம் வெகு நுட்பம். தவிர மாணவர்களின் விடைகளைத் திருத்தும்பொழுது முதல் கிளாஸா? இரண்டாவதா? மூன்றாவதா? அல்லது வெகு கேவலமா?— அதாவது எழுபத்தைந்து சத விகிதத்துக்கு மேலா அறுபதுக்கு மேலா? ஐம்பதுக்கு மேலா? முப்பத்தைந்துக்கு மேலா? அல்லது பரிதாபகரமான இருபதுக்கும் கீழ்ப்பட்டதா? இம்மாதிரி ஒரு நிஷ்கர்ஷை செய்துகொண்டே திருத்தவேண்டும். ஆகவே இருபத்தொன்பது என்ற மார்க்கே வரக்கூடாது.

**செ**ன்னையில் மார்க்குப் போடுவதில் சில பேர்களுக்கு வெகு கருமித்தனம் இருப்பதை அறிவேன். உதாரணமாக நாளது தேதி வரையில் எம். எல். என்ற சட்டப் பரீட்சையில் முதல் வகுப்பே கிடையாது. ஸர் டி. சதாசிவ அய்யர் உட்பட இரண்டாம் வகுப்புத்தான். 1933-ல் இப் பரீட்சையில் ஆஜரானதில் ஒரு ரஸமான விஷயம் ஞாபகம் வருகிறது. வியாசம் என்ற பேப்பரில் 200-க்கு 110 கிடைத்தது. வேடிக்கையாகப் பரீக்ஷை முடிந்த பிறகு அந்தப் பரீக்ஷாதிகாரியிடம் "ஐயா! கூடப் பத்து மார்க்கு போட்டிருக்கக்கூடாதா?" என்று கேட்டேன். அதற்கு அவர் "எம். எல். பரீக்ஷையில் முதல் வகுப்பாவது!" என்றார். இந்த மனோபாவத்திலிருக்கும் பரீக்ஷாதிகாரிகள் பலர். இங்கே, காசி, அலகாபாத், டில்லி, டாக்கா, அலிகார் முதலிய சர்வகலாசாலைகளில் பரீக்ஷாதிகாரியாயிருப்பதில் சில மாணவர்களுக்கு நூற்றுக்கு எண்பத்தொன்பது, தொண்ணூறு வரைகூடச் சட்ட பரீக்ஷையில் மார்க்குகள் கொடுக்கப்படுகின்றன. அந்த 29 சதவிகிதம் என்ற அநியாயம் நடப்பதில்லை!!

## பரீட்சையின் கொடுமையை நீக்க வேண்டும்

**த**விர, பி.ஏ. எம்.ஏ. எம். எல். முதலிய பரீக்ஷைகளில் (Viva Voce) நேரில் மாணவர்களைப் பரீக்ஷித்து அவர்கள் மனோதைரியத்தையும், சமயோசித புத்தியையும், பொதுத் திறமையையும் அறிகிறோம். படித்ததை எல்லாம் ஒரே வாரத்திற்குள் கக்கிவிட வேண்டுமென்பது

பெரும் கொடுமை. இதற்காக மேனாடுகளில்—உதாரணமாக பாரிஸ்டர் பரீக்ஷையில் நடந்த பாடம் மட்டும் ஒவ்வொரு விஷயத்திலும் பரீக்ஷை நடத்துகிறார்கள். பரீட்சாதிகாரிகள் மனோபாவம் திருந்த வேண்டும். எப்படி ஒரு பையனைப் படுகுழியில் தள்ளுவது என்ற மனோநிலை தவறு. ஒரு மாணவன் விஷயத்தை அறிந்து தப்பிதமில்லாமல் எழுதியிருந்தால் போதும். உருப்போடுகிற சுபாவத்தை மெச்சக்கூடாது. சட்டப்பரீட்சைகளில் முதல் வகுப்பில் பாஸ் செய்தவர்கள் வாழ்க்கை அனுபவத்தில் திறமையற்றிருப்பதை அறிவோம். பி. எல். பரீட்சையில் நான்கு அல்லது ஐந்து தரம் தவறியவர்கள் வக்கீல் தொழிலில் முதல் தரமாக வந்தவர்களையும் அறிவோம்.

## கீழ் வகுப்புகளில் மாணவர்களை நிறுத்தக் கூடாது.

அமெரிக்காவிலுள்ள அநேகம் கலாசாலைகளில் பரீட்சை தேறுதவர்கள் வெகு துர்லபம். நம் கீழ்த்தரப் பாடசாலைகளில் எஸ். எஸ். எல். ஸி. வரை ஒருவரையும் வகுப்புகளில் நிறுத்த வேண்டிய அவசியமே இல்லை. மூன்று மாதம், ஆறு மாதம், வார்ஷிகம் இந்த ஒவ்வொரு பரீட்சையிலும் கிடைத்த மார்க்குகள் எல்லாவற்றையும் சேர்த்துப் பார்த்து மாணவர்களின் திறமையை நிர்ணயிக்க வேண்டும்.

## ஆனந்தக் கல்வி முறை

நம் மேதாவியான ராஜாஜி அவர்கள் ஒரு சமயத்தில் "இந்தக் குறைவுகளுள்ள உலகத்தில், குற்றம் செய்தோரை அடக்கியாள ராஜ தர்மத்தில் நிலை உபயோகிக்க வேண்டியது அவசியமே" என்றார். மாணவர்களின் தராதரம் அறியப் பரீட்சைகள் அவசியமே. ஆனால் பரீட்சைகளின் கொடுமையை நீக்கலாம்; கொடுமைகள் இருக்கவேண்டிய அவசியமில்லை. பரந்த நோக்கமும், மாணவர்களிடத்து விசேஷ பிரியமும் உபாத்தியாயரிடம் வேண்டும். உபாத்தியாயரும் பரீட்சாதிகாரியும் பெற்றோர்களே. அவர்கள் குற்றம் கண்டு பிடிப்பதே தொழிலாக உடைய ஹெட் கான்ஸ்டேபில்கள் அல்லர்; அன்பும் வாய்மையும் அவர்களிடம் பொங்க வேண்டும்.

சாந்திநிகேதனில் குருதேவர் ரவீந்திரநாதரிடம் இக்குணங்களைக் கண்டேன். அங்கு மாணவ மாணவிகள் ஆனந்தமாகக் கல்வி கற்றார்கள். சுதந்திர இந்தியாவில் எல்லாப் பள்ளிக் கூடங்களும் சாந்திநிகேதனங்கள் ஆகவேண்டும்.

## ★ பெங்களூரில் பிரபல திருமணம் ★



பெங்களூர் ஸீனியர் ஜில்லா மெடிகல் ஆபீஸர் டாக்டர் பி. ராஜகோபால் அவர்கள் புதல்வர் பாலகிருஷ்ணனுக்கும், பெங்களூர் மணியம் & கம்பெனி புரோப்ரைடர் வி. ஆர். சுப்ரமணியம் அவர்கள் புதல்வி சகுந்தலாவுக்கும் சென்ற 17-6-48-ம் தேதி பெங்களூரில் திருமணம் நடந்தேறியது. பிரமுகர்கள் பலர் வைபவத்திற்கு விஜயம் செய்து சிறப்பித்தார்கள்.

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

## 36. காசியில் ஏமாற்றம்

**கா**ந்திஜி எதிர்பார்த்தது போலவே மூன்றாம் வகுப்புப் பிரயாணம் மிக மோசமாயிருந்தது. அதிகாரிகள் மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளை ஆடுமாடுகள் என்று எண்ணி நடத்தினார்கள். ஆடு மாடுகளுக்குரிய சௌகரியங்கள்தான் மூன்றாவது வகுப்பில் அளிக்கப்பட்டன. இங்கிலாந்திலும் தென்னாப்பிரிக்காவிலும் காந்திஜி ரயில் பிரயாணம் செய்ததுண்டு. அங்கேயெல்லாம் மூன்றாம் வகுப்பு இவ்வளவு மோசமாயில்லை. முதல் வகுப்புக்கும் மூன்றாம் வகுப்புக்கும் இவ்வளவு வித்தியாசமும் கிடையாது. தென்னாப்பிரிக்காவில் மூன்றாம் வகுப்பில் பெரும்பாலும் நீகிரோவர்தான் பிரயாணம் செய்வார்கள். ஆயினும் அங்கே மூன்றாம் வகுப்பில் இதைவிட அதிக வசதி அளிக்கப்பட்டது. சில ரயில்களில் மூன்றாம் வகுப்புக்குக்கூட இரவில் தூங்க இடமும் மெத்தை தைத்த ஆசனமும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். கூட்டம் அளவுக்கு அதிகம் ஆகாமலும் பார்த்துக் கொண்டார்கள். இங்கேயோ நிலைமை எல்லா விதத்திலும் மோசமாயிருந்தது. வசதிகளும் இல்லை; கூட்டமும் குறிப்பிட்ட எண்ணிக்கையை விட எப்போதும் அதிகம்.

ரயில்வே அதிகாரிகளின் அசட்டையும் அக்கிரமங்களும் ஒருபுறம் இருக்க, பிரயாணிகளும் பெரும் அநியாயங்கள் செய்தார்கள். மற்றப் பிரயாணிகளின் சௌகரியத்தைப் பொருட்படுத்தாமல் குப்பைகளைப் போட்டார்கள்; சுருட்டுக் குடித்தார்கள்; வெற்றிலை புகையிலை மென்று துப்பி வண்டியை ஒரு எச்சில் குழியாக்கினார்கள். கூச்சல் போடுவதும் ஆபாச மொழிகள் பேசுவதும் அதிகம். இந்தப் பயங்கரமான நிலைமையை எப்படிச் சீர்திருத்துவது என்று மகாத்மா பெரிதும் சிந்தனை செய்தார். படித்த வகுப்பார் மூன்றாம் வகுப்பிலேயே பிரயாணம் செய்வதுதான் அதற்கு வழி என்று தோன்றியது. படித்தவர்கள் மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்து மற்றவர்களின் துர்வழக்கங்களைச் சீர்திருத்த வேண்டும். அவசியம் ஏற்பட்ட போதெல்லாம் வசதிக் குறைவுகளைப் பற்றி அதிகாரிகளுக்குப் புகார் எழுதவேண்டும். சிப்பந்திகளுக்கு லஞ்சம் கொடுத்துத் தங்கள் சொந்த வசதிகளைத் தேடிக் கொள்ளக் கூடாது. விதிகளை யார் மீறி நடந்தாலும் அதைக் கண்டிக்க வேண்டும்; தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும். இப்படியெல்லாம் செய்தால் ஒருவாறு சீர்திருத்தலாம் என்று எண்ணினார். தாமே இப்படியெல்லாம் செய்ய வேண்டும் என்றும், அதற்காக ஓர் இயக்கமே நடத்தவேண்டும் என்றும் உத்தேசித்தார். ஆனால் பின்னால் பெரிய பெரிய காரியங்களில் ஈடுபட்டதனால் உத்தேசத்தை நிறைவேற்ற முடியவில்லை.

தம்பி! காந்திஜியின் மேற்படி அநுபவம் 47 வருஷங்களுக்கு முன்னால் 1901-ல் ஏற்பட்டது. இப்போது இந்தியா சுதந்திரம் அடைந்திருக்கிறது. ரயில்வேக்கள் பொது மக்களின் சொத்தாகிவிட்டன. பொதுஜன மந்திரி ரயில்வேக்களின் பொறுப்பை ஏற்று நடத்துகிறார். ஆயினுங்கூட, மூன்றாம் வகுப்புப் பிரயாணம் இன்னும் நரகவேதனையாகவே இருந்து வருகிறது. சுயராஜ்ய சர்க்காரின் நடவடிக்கையினால் ஏற்படக் கூடிய சீர்திருத்தங்கள் கூடிய சீக்கிரத்தில் ஏற்படும் என்று எதிர்பார்க்கலாம். ஜனங்களும் சர்க்காருடன் ஒத்துழைக்கவேண்டும். காந்திஜி எடுத்துக் காட்டியுள்ள குறை



களைப் போக்கிக்கொண்டு அவர் கூறியுள்ள யோசனைகளையும் கடைப்பிடிக்க வேண்டும்.

* * *

கல்கத்தாவிலிருந்து இராஜகோட்டை செல்லும் மார்க்கத்தில் காந்திஜி காசி, ஆக்ரா முதலிய நகரங்களில் இறங்கிப் பார்த்துவிட்டுச் சென்றார். காசியில் அவர் கண்ட காட்சிகள் பெரும் ஏமாற்றமளித்தன. பிரசித்தி பெற்ற காசி விசுவநாதர் ஆலயத்துக்குப் போகும் வழி ஒரு குறுகலான சந்து. கோவிலைச் சுற்றியும் கோவிலுக்குள்ளேயும் அமைதி என்பதே கிடையாது. தந்திரசாலிகளான கடைக்காரர்கள் மிட்டாய்களும் புது தினுசு விளையாட்டுக் கருவிகளும் விற்றார்கள். கடைக்காரர்களும், கடைகளில் சாமான் வாங்கிய யாத்ரீகர்களும் ஏகச் சத்தம் போட்டார்கள். எங்கெங்கும் ஈக்கள் மொய்த்தது சகிக்க வொண்ணாததா யிருந்தது. மனங் குவிந்து இறைவனைத் தியானிப்பதற்கு அது ஏற்ற இடமாகவே இல்லை. இவ்வளவு சந்தை இரைச்சலிலும் மெய்மறந்து பக்தி பரவச நிலையில் இருந்த ஒரு சிலர் காணப்பட்டனர். ஆனால் மிகப் பெரும்பாலோருக்கு அது அசாத்தியமா யிருந்தது.

கோவில் வாசலை அடைந்ததும் அழுகிப் போன பூக்குவியலின் நாற்றம் காந்திஜிக்கு அருவருப்பு ஊட்டிற்று. கோவிலின் உட்புறம் நல்ல சலவைக் கல்லால் தளவரிசை போடப்பட்டு விளங்கியது. ஆனால் யாரோ ஒரு பக்தர் அந்தச் சலவைக் கற்களை நடுநடுவே உடைத்து ஆங்காங்கு வெள்ளி ரூபாய்களைப் பதித்திருந்தார். இந்த ரூபாய்கள் அழுக்குச் சேரும் அசுத்த பாண்டங்களாக உபயோகப்பட்டன.

ஆலயத்தைச் சேர்ந்த 'ஞான வாவி' என்னும் புண்ணிய தீர்த்தத்துக்குச் சென்றார். ஞான வாவியைச் சுற்றியுங்கூட ஒரே ஆபாசமும் அழுக்குமா யிருந்தன. காந்திஜிக்கு இதெல்லாம் மிக்க ஆத்திரத்தை அளித்தன. அந்த ஆத்திரத்தை வாவிக்கரையில் இருந்த பண்டாவிடம் காட்டினார். (கோவில் குருக்களின் வேலையும் புரோகிதரின் வேலையும் சேர்த்துச் செய்கிறவர்களுக்கு வட இந்தியாவில் 'பண்டாக்கள்' என்று பெயர்) பண்டாவுக்குத் தட்சிணை கொடுக்க மனம் வரவில்லை. இதற்கு அறிகுறியாக ஒரு தம்பிடி கொடுத்தார். பண்டா, "நீ நேரே நரகத்துக்குப் போவாய்!" என்று சபித்துக் காந்திஜி கொடுத்த தம்பிடியை வீசி எறிந்தார்.

காந்திஜி இதனால் மனங் கலங்கவில்லை. "என்னுடைய கதி எப்படியானாலும் ஆகட்டும்; ஆச்சாரியராகிய தாங்கள் இப்படிப் பேசுதல் தகாது. வேண்டுமென்றால் தம்பிடியை எடுத்துக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால் அதுவும் போய்விடும்!" என்றார்.

"தொலைந்து போ! உன் தம்பிடி இங்கே யாருக்கு வேண்டும்?" என்று பண்டா மேலும் திட்டினார்.

"நமக்கு ஒரு தம்பிடி லாபம்; பண்டாவுக்கு நஷ்டம்" என்று காந்திஜி நினைத்துக் கொண்டு தம்பிடியைத் திருப்பி எடுத்துக் கொண்டு புறப்பட்டார். ஆனால் பண்டாவா விடுகிறவர்? காந்திஜியைக் கூப்பிட்டு, "நானும் உன்னைப் போல நடந்து கொள்ளலாமா? தம்பிடியை ஏற்றுக் கொள்ளாவிட்டால் உனக்குப் பாபம் சம்பவிக்கும். கொடுத்து விட்டுப் போ!" என்றார்.

காந்திஜி அவ்விதமே கொடுத்து விட்டுத் திரும்பினார்.

இதையெல்லாம் விவரித்து விட்டுக் காந்திஜி தமது காசி யாத்திரையைப் பற்றிக் கடைசியாக எழுதியிருப்பதாவது.—

"ஆண்டவன் கருணையில் யாருக்கேனும் ஐயமிருக்குமாயின் அவர் இத்தகைய புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போய்ப் பார்ப்பாராக. யோகீசுவரனான இறைவன் தன் பெயரால் நடக்கும் எத்தனை அக்கிரமங்களையும் வெளி வேஷங்களையும் பொறுத்துக் கொண்டிருக்கிறான்! வெகு காலத்துக்கு முன்பே அவன் 'யே யதா மாம் ப்ரபத்யந்தே தாம் ஸ்ததைவ பஜாம்யஹம்' என்று திருவாய் மலர்ந்தான். மனிதன் விதைப்பதை அறுக்கிறான். கரும பலனை அநுபவியாது தப்பித்துக் கொள்ளல் எவ

னாலும் இயலாத காரியம். எனவே இதில் ஆண்டவன் தலையிடுவதற்கு அவசியமே யில்லை. சட்டத்தை இயற்றிவிட்டு அவன் அப்புறம் சென்று விட்டான் என்றே கூறலாம்.''

மேற்கண்டவாறு காந்திஜி எழுதி இருபது ஆண்டுகள் ஆகிவிட்டன. இன்னமும் காசி நகரமும் விசுவநாதர் ஆலயமும் அவர் பார்த்த இலட்சணமாகவே இருக்கின்றன. இந்தியா சுதந்திரம் அடைந்திருப்பதை முன்னிட்டு இனிமேலாவது காசி க்ஷேத்திரம் புறத் தூய்மை அடைந்தால் மிக நன்றாயிருக்கும், காந்தி மகாத்மாவின் ஆத்மா சாந்தமடையும் என்று கூடச் சொல்லலாம்.

## 37. நம்பிக்கைச் சோதனை

இராஜகோட்டை போய்ச் சேர்ந்த பிறகு காந்திஜி அங்கே வக்கீல் தொழில் ஆரம்பித்தார். தென்னாப்பிரிக்கா அநுபவத்தின் பயனாக இம்முறை கோர்ட்டில் நன்றாகப் பேசும் ஆற்றல் பெற்றிருந்தார். ஏற்றுக் கொண்ட சில வழக்குகளில் வெற்றியடைந்தார். இதைக் கண்ட அவருடைய நண்பர்கள் பம்பாய்க்குச் சென்று அவர் மறுபடியும் பாரிஸ்டர் தொழில் தொடங்க வேண்டுமென்று சொன்னார்கள். வழக்குகள் வருமா என்ற யோசனை வேண்டாம் என்றும், வேண்டிய வழக்குகள் தாங்களே அனுப்பி வைப்பதாகவும் அவர்கள் சொன்னார்கள்.

காந்திஜியும் அவர்களுடைய யோசனைக்கு இணங்கிப் பம்பாய்க்குச் சென்றார். பாயன் கில்பர்ட்—ஸயானி இவர்களுடைய காரியாலயம் இருந்த கட்டிடத்தில் தாமும் அறைகள் வாடகைக்கு வாங்கிக் கொண்டார்.

பம்பாயில் ஸ்திரவாசம் ஏற்பட்டு விட்டதாகத் தோன்றியது. ஆனால் காந்திஜியின் வாழ்க்கை அமைதியாக நடப்பதில் ஆண்டவனுக்குத் திருவுளம் இல்லை.

மகாத்மாவின் இரண்டாவது புதல்வனான மணிலாலுக்குக் கடுமையான சன்னி சுரம் (டைபாய்டு) கண்டது. ஏற்கெனவே மணிலால் வைசூரி போட்டுக் கஷ்டப் பட்டவன். இப்போது சன்னி சுரத்தோடு கபவாத சுரமும் கலந்திருந்தது. கடுமையான சுரமாதலால் இரவில் பிதற்றல் முதலிய சேஷ்டைகளும் இருந்தன.

டாக்டர் ஒருவரைக் காந்திஜி அழைத்து வந்தார். சன்னி சுரத்திற்கு மருந்து அதிக பயன் தராது என்று டாக்டர் சொன்னார். கோழி முட்டையும் கோழிக் குஞ்சு ரசமும் கொடுத்து வரும்படியும் கூறினார்.

காந்திஜிக்குச் சைவ உணவு விரதத்தில் அதிக பற்று உண்டு என்பதுதான் உனக்குத் தெரியுமே? அந்த விரதத்தைக் கைவிடக் காந்திஜிக்கு விருப்பமில்லை. ஆனால் மணிலாலோ அப்போது பத்து வயதுக் குழந்தைதான். அவனுடைய அபிப்பிராயத்தைக் கேட்டுத் தீர்மானிப்பதற்கில்லை. அவனுக்காகக் காந்திஜியே தீர்மானித்தாக வேண்டும்.

தம்முடைய உறுதியின்படி நடந்தால் மணிலாலின் உயிருக்கு அபாயம் நேரலாம். அவ்விதம் குழந்தையை அபாயத்துக்கு உட்படுத்துவது தர்மமா?

டாக்டர் பார்ஸி வகுப்பைச் சேர்ந்த மிக நல்ல மனிதர். "நாங்கள் சாகபட்சணிகள்; தாங்கள் சொன்னவற்றைத் தவிர வேறு ஏதாவது யோசனை சொல்ல முடியுமா?'' என்று காந்திஜி கேட்டார்.

"மற்றக் காலங்களில் சாக பட்சண விரதம் சரிதான். ஆனால் புதல்வனுடைய உயிருக்கே அபாயம் நேரலாம் என்றிருக்கும்போது பிடிவாதம் செய்யக் கூடாது. எவ்வளவோ சனாதன இந்து குடும்பங்களில் என்னுடைய யோசனைப்படி செய்திருக்கிறார்கள். தாங்களும் இந்தக் குழந்தை விஷயத்தில் கடின சித்தம் காட்டாமலிருப்பது நலம்'' என்றார் டாக்டர்.

அதற்குக் காந்திஜி கூறிய பதிலாவது:—"டாக்டரே தாங்கள் தங்களுடைய கடமையைச் செய்து விட்டீர்கள். ஆனால் என்னுடைய பொறுப்பை நான் கைவிட முடியாது. வயது வந்த பையனாயிருந்தால் அவனுடைய அபிப்பிராயத்தைக் கேட்டு அதன்படி செய்ய விட்டிருப்பேன். சிறு குழந்தையாயிருப்பதால் அவனுக்காக நான்தான் முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. என்னுடைய மனச்சாட்சிப்படி நான்தான் முடிவு செய்ய வேண்டும். மாமிசமும் முட்டையும் மனிதன் உண்ணக் கூடாது என்பது என்னுடைய திடமான சமயக் கொள்கை. அது சரியோ தவறோ தெரியாது. ஆனாலும் உயிர் வாழ்வதற்காகக்

கூடச் சிறிய காரியங்களை நாம் செய்யக் கூடாது. இது என் உறுதியான நம்பிக்கை. ஆகையால் தங்களுடைய யோசனையை நான் அனுசரிப்பதற்கில்லை. எனக்குத் தெரிந்திருக்கும் ஜல சிகிச்சை முறைகளைக் கையாளப் போகிறேன். ஆனால் நாடி பார்க்கவும், இருதயம்—நுரையீரல் பரிசோதிக்கவும் எனக்குத் தெரியாது. தாங்கள் அவ்வப்போது வந்து இந்தப் பரிசோதனைகள் மட்டும் செய்து சொல்லி விட்டுப் போனால் மனப்பூர்வமான நன்றி செலுத்துவேன்."

காந்திஜியின் தர்ம சங்கட நிலையை டாக்டர் நன்கு உணர்ந்தார். "அப்படியே ஆகட்டும்!" என்று சொல்லி விட்டுப் போனார்.

அவர் போனபிறகு காந்திஜி தமக்கும் டாக்டருக்கும் நடந்த சம்பாஷணை விவரத்தை மணிலாலிடம் ஒருவாறு கூறினார். மணிலால் அப்பாவுக்கு ஏற்ற புதல்வன். "எனக்கு முட்டையும் இறைச்சி ரசமும் வேண்டாம். என்னால் சாப்பிட முடியாது. தங்களுடைய ஜல வைத்தியமே செய்யுங்கள்!" என்றான்.

ஜெர்மானியரான டாக்டர் கூன் என்பவர் ஜல சிகிச்சை முறையைப் பற்றி ஒரு நூல் எழுதியிருக்கிறார். அதில் ஆசன ஸ்நானம், இடுப்பு ஸ்நானம் ஆகிய முறைகளினால் நோய் நீக்கும் விதத்தைப்பற்றி எழுதியிருக்கிறார். காந்திஜி மேற்படி நூலில் கண்ட முறைகளை ஏற்கெனவே சோதனை செய்திருந்தார். இப்போது மணிலாலுக்கு இடுப்பு ஸ்நானம் செய்வித்தார். தொட்டி ஜலத்தில் மூன்று நிமிஷம் முழங்கால்களுக்கு மேலே தொப்புளுக்குக் கீழே தண்ணீர் இருக்கும்படி உட்காரவைத்து வெளியே எடுத்தார். இதை அடிக்கடி செய்ததுடன் ஆரஞ்சுப் பழ ரசமும் தண்ணீரும் கலந்து உணவாகக் கொடுத்து வந்தார்.

மூன்று நாள் இப்படிச் செய்து வந்தும் பயன் தெரியவில்லை. 104 டிகிரி வரையில் ஜுரம் அடிக்கடி ஏறிக் கொண்டிருந்தது. காந்திஜி கவலை அடைந்தார். தம்முடைய பிடிவாதம் குழந்தைக்கு ஆபத்தாக முடிந்து விட்டால் என்ன செய்கிறது? தம்முடைய வைத்தியக் கொள்கையைக் குழந்தை மேல் சுமத்துவது நியாயமாகுமா? வேறு டாக்டரைக் கூப்பிட்டால் என்ன? அல்லது ஆயுர்வேத வைத்தியரை அழைத்துக் காட்டினால் என்ன?

இந்த எண்ணங்களுக்கு இடை யிடையே மாறான எண்ணங்களும் தோன்றின. டாக்டர்கள் மட்டும் குணப்படுத்தி விடுவதாக உத்தரவாதம் கொடுக்கிறார்களா? அவர்களும் சோதனைதானே செய்கிறார்கள்? குழந்தையின் உயிர் ஆண்டவனுடைய சித்தத்தைப் பொறுத்தது. நமக்குச் சரியென்று நிச்சயமாகத் தோன்றுகிறபடி செய்வதுதான் நம் கடமை. அப்புறம் கடவுள் அருள் எப்படியோ அப்படி நடக்கட்டும்.

தாபஜ்வரத்தினால் தவித்துக் கொண்டிருந்த மணிலாலுக்கு அருகில் படுத்துக் கொண்டு காந்திஜி மேற் கண்டவாறெல்லாம் சிந்தனை செய்தார். சட்டென்று ஒரு யோசனை தோன்றியது. எழுந்து ஒரு நீளமான துணியைத் தண்ணீரில் நனைத்துப் பிழிந்தார். அதை மணிலாலின் உடல்மீது தலையை மட்டும் விட்டுவிட்டுச் சுற்றினார். தலையில் தனியாக ஓர் ஈரத் துண்டைச் சுற்றினார். பிறகு இரண்டு கனமான கம்பளிகளைப் போட்டுக் குழந்தையைப் போர்த்தி விட்டார். அப்போது பழுக்கக் காய்ச்சிய இரும்பைப்போல் குழந்தையின் உடம்பு கொதித்தது. ஆனால் ஒரே வறட்சி; லவலேசமும் வியர்வை இல்லை.

மணிலாலைச் சற்று நேரம் அவனுடைய அன்னையிடம் ஒப்புவித்துவிட்டு வெளியே சிறிது உலாவச் சென்றார். சௌபாத்தி கடற்கரைக்குப் போனார். அப்போது இரவு மணி பத்து. கடற்கரையில் இவரைத் தவிர இன்னும் இரண்டொருவரே உலாவிக் கொண்டிருந்தார்கள். காந்திஜி அங்குமிங்கும் நடந்து கொண்டே கடவுளைப் பிரார்த்தித்தார். "ஆண்டவனே! இந்தச் சோதனை நேரத்தில் என்னுடைய நம்பிக்கையைப் பாதுகாத்தல் உன்னுடைய பொறுப்பு!" என்று முறையிட்டார். அவருடைய உதடுகள் "ராம் ராம் சீதா ராம்" என்று ஜபித்துக் கொண்டிருந்தன. சிறிது நேரம் உலாவிய பிறகு வீட்டுக்குத் திரும்பினார். குழந்தைக்கு எப்படி இருக்கிறதோ, என்னமோ என்று நெஞ்சு கலக்கமுற்றிருந்தது.

வீட்டுக்குள் நுழைந்ததும் "பாபு! வந்து விட்டீர்களா?" என்று மணிலாலின் குரல் கேட்டது.

"வந்து விட்டேனடா, கண்மணி!" என்று சொல்லிக்கொண்டே போனார்.

"உடம்பு பற்றி எரிகிறது. துணியையும் கம்பளியையும் எடுத்து விடுங்கள்."

"குழந்தாய்! உடம்பு வியர்த்து விட்டிருக்கிறதா?"

"வியர்வை வெள்ளத்தில் முழுகியிருக்கிறேன். சீக்கிரம் எடுங்கள்."

குழந்தையின் நெற்றியைக் காந்திஜி தொட்டுப் பார்த்தார். முகத்து முத்தாய் வியர்வை துளிர்த்திருந்தது. சுரமும் குறைந்திருந்தது. காந்திஜி ஆண்டவனுக்கு இதயபூர்வமான நன்றி செலுத்தினார்.

"மணிலால்! சுரம் இனி நிச்சயமாய்க் குணமாகிவிடும். இன்னும் சிறிது வியர்க்கட்டும்."

"அப்பா! இனி ஒரு நிமிஷமும் இந்த உலைக்களத்தில் என்னால் இருக்கமுடியாது. தயவு செய்து உடனே எடுத்து விடுங்கள். வேண்டுமானால் மறுபடியும் துணி சுற்றிக் கொள்ளலாம்."

பேச்சுக் கொடுத்துக்கொண்டே இன்னும் சில நிமிஷம் வைத்திருந்தார். நெற்றியிலிருந்து வியர்வை வழிந்து அருவியாக ஓடிற்று. பிறகு கம்பளிகளையும் ஈரத் துணியையும் எடுத்துவிட்டு உடம்பைத் துடைத்தார்.

மணிலால் தூக்கம் வருகிறது என்றான். காந்திஜிக்கும் தூக்கம் வந்தது. தந்தையும் மகனும் ஒரே படுக்கையில் படுத்துத் தூங்கி விட்டார்கள்.

மறுநாள் காலையில் சுரம் நிரம்பக் குறைந்திருந்தது. ஆனாலும் அடியோடு போகவில்லை. பாலும் பழரசமும் மட்டும் அருந்திக் கொண்டு மணிலால் நாற்பது நாள் படுக்கையில் இருக்கவேண்டியிருந்தது. ஆயினும் அன்றிரவு சுரம் கட்டுக்குள் வந்து விட்டபடியால் காந்திஜிக்குக் கவலையும் பயமும் இல்லாமற் போயிற்று.

"இன்று என் புதல்வர்களுக்குள்ளே மணிலாலே அதிக தேகாரோக்கியத்தோடு இருக்கிறான். அவன் அந்தக் கண்டத்திலிருந்து தப்பி உயிர் பிழைத்ததற்குக் காரணம் ஜல சிகிச்சையா, ஜாக்கிரதையாக நீர் உணவே கொடுத்துப் பணிவிடை செய்து வந்ததா, அல்லது ஆண்டவனுடைய கருணைதானா என்று யார் நிச்சயமாய்ச் சொல்ல முடியும்? ஒவ்வொருவரும் தத்தம் நம்பிக்கைக்கு ஏற்ப முடிவு செய்து கொள்ளட்டும். என் வரையில், கருணாமூர்த்தியான ஆண்டவனுடைய அருள் மகிமைதான் மணிலாலுடைய உயிரை ரட்சித்து என்னையும் ஒரு பெருஞ்சோதனையிலிருந்து காப்பாற்றியது என்று இன்றைக்கும் நம்பி வருகிறேன்!" என்பதாகக் காந்தி மகான் தம் சுய சரிதத்தில் எழுதியுள்ளார்.



# மறக்க முடியுமா?

துஷ்யந்தன்

பரியநாத முதலியாரின் பெண்ணுக்கு அன்று கல்யாணம். மாதா கோவிலுக்குப் போன பெண்ணும் மாப்பிள்ளையும் இன்னும் திரும்பிவரவில்லை. கோவிலிலிருந்து அவர்கள் வந்ததும் வீட்டில் நடக்கவேண்டிய சடங்குகள் இன்னும் எத்தனையோ இருந்தன. ஆமாம், முதலியார் வீட்டுக் கல்யாணத்தில் இவைகளெல்லாம் உண்டு. இரண்டு தலைமுறைகளாகத்தான் அவர்கள் கிறிஸ்தவர்கள்; அதற்கு முன் பழுத்த சைவர்கள். அந்தப் பழமை இன்னும் அவர்களை விடவில்லை. ஆகவே, தம்பதிகள் வரவை எதிர்பார்த்து நாங்கள் எல்லோரும் அவர் வீட்டில் காத்திருந்தோம்.

கல்யாண வீட்டில் பேச்சுக்குத்தானா குறைவு? என்ன வெல்லாமோ பேசிக் கொண்டிருந்தோம். காதல், கல்யாணம், பரஸ்பர அன்பு இப்படி எங்கெல்லாமோ சுற்றி யலைந்தோம். பரஸ்பர அன்பு என்றதும் ஒருவர் எங்களைப் பார்த்து, "ஸார், என்னமோ காதல், அன்பு என்றெல்லாம் பேசுகிறீர்களே, இந்த மனுஷர்களுக்கு இருப்பதைவிட ஆயிரம் பங்கு அதிகமாக மிருகங்களுக்கு இந்தப் பரஸ்பர அன்பு இருக்கிறது. சொன்னால் நம்பமாட்டீர்கள். இருந்தாலும் சொல்கிறேன், நேரமாவது போகட்டும்" என்றார்.

அவர் மணப்பெண்ணின் தாய் மாமன். முதல் மகாயுத்தத்தில் அவர் கேப்டனாகப் பதவி வகித்தவராம். இப்பொழுதும் அவரை 'காப்டன் ஜான்' என்றுதான் எல்லோரும் கூப்பிடுகிறார்கள். அவர் என்னவோ சொல்லப் போகிறேன் என்கிறாரே, அதையும்தான் கேட்போமே என்று நாங்களும் அவரைச் சுற்றி உட்கார்ந்து கொண்டோம். அவர் தம் கதையை ஆரம்பித்தார்:

* * *

அப்பொழுதெல்லாம் நான் பெரிய வேட்டைக்காரன். சண்டைக்குப் போய் வந்த புதிது. என்னிடம் உயர்ந்த துப்பாக்கி ஒன்றும் இருந்தது. சளைக்காமல் எங்கு வேண்டுமானாலும் போய்

வருவேன். காட்டுப்பன்றி, மான் இவைகளைத்தான் அதிகமாகச் சுடுவேன். ஒரு சமயம் இரண்டு புலிகளைக் கூடக் கொன்றுவிட்டேன். இதனால் எனக்கு நல்ல பெயர். ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களெல்லாம் என்னுடன் நெருங்கிப் பழகுவார்கள். ஜமீன்தார்கள் சிலரும் என்னைச் சுற்றிச் சுற்றி வருவார்கள். சென்னை ராஜதானி முழுமைக்கும் 'லைசென்ஸ்' எடுத்து வைத்திருந்தேன். வேட்டைப் பைத்தியம் அப்பொழுது என்னை நன்றாகப் பிடித்திருந்தது. காடுகள் எங்கெல்லாம் இருந்ததோ, அங்கெல்லாம் என்னைப் பார்க்கலாம்.

தென் ஆற்காடு ஜில்லாவின் காட்டனந்தல் பிரதேசத்தில் நான் தங்கியிருந்த போதுதான் எனக்குப் புலியைச் சுடும் சந்தர்ப்பம் கிடைத்தது. அங்கேதான் எனக்கு ஒரு துணையும் கிடைத்தது. காட்டுப் பிரதேசத்தில் பெரிய வீரன் ஒரு வேட்டைக்காரன். அந்த மலைக்காட்டு ஜாதியினருக்கு அவன்தான் தலைவன். நல்ல உயரம்; அதற்கேற்ற பருமன். என்னவோ என்னிடம் அவனுக்குக் கொஞ்சம் மதிப்பு ஏற்பட்டு விட்டது. வறண்டு கிடந்த அந்த மலைப் பிரதேசத்தில் அவன்தான் எனக்கு ஆட்டுப்பாலும் தேனும் கொடுத்து வந்தான். ஆமாம், இட்டிலியும் காப்பியும் அங்கே கிடையாது! பெரியவீரன் கொடுத்த ஆட்டுப்பால்தான் அங்கே தேவாமிர்தம். அந்தப் பெரியவீரன்தான் எனக்கு ஒரு நாள் வேதாரண்யம் காடுகளுக்குப் போகலாமென்று யோசனை கூறினான். நானும் அதற்குச் சம்மதித்து வேதாரண்யத்துக்குக் கிளம்பினேன்.

காட்டிற்குள் நுழைந்து வேட்டையாடுவதற்குப் பணம் கட்டி அனுமதிச் சீட்டு வாங்க வேண்டும். எத்தனை துப்பாக்கிகள் உள்ளே போக வேண்டுமோ, அத்தனைக்கும் தனித் தனியாக அனுமதி பெற வேண்டும். எனக்கும் பெரிய வீரனுக்கும் நானே பணம் கட்டி அனுமதி பெற்றுக் கொண்டேன்.

முன்பெல்லாம் இவ்வளவு கஷ்டம் கிடையாது. நான் போகும் பொழுது இந்த உத்தரவு அமுலுக்கு வந்திருந்தது. காட்டிலாக்கா அப்பொழுதுதான் விழித்துக்கொண்டதோ என்னவோ, பலமான தடையுத்தரவுகள் எல்லாம் போட்டு வைத்திருந்தது. அனுமதி பெற்றுக் கொண்டாலும் கூடச் சில நிபந்தனைகள் விதிக்கப்பட்டன. அந்த நிபந்தனைகள் இன்னும் இருக்கின்றன. ஜீவகாருண்யத்தினாலா, அல்லது மிருகவர்க்கமே பூண்டற்றுப் போய்விடுமோ என்ற பயத்தினாலோ அந்த நிபந்தனைகளைச் சர்க்கார் விதித்திருக்கிறார்கள். அதன்படி பெண் மான்களைச் சுடக் கூடாது. மான் வர்க்கம் அழிந்து விடாமலிருக்க இந்தப் பாதுகாப்பு! ஆண் மான்களிலும் எல்லாவற்றையும் சுட்டுவிடக் கூடாது. ஆறு அங்குல உயரத்திற்கு மேல் கொம்புள்ள மான்களை மட்டுமே சுடலாம். குட்டிகளைத் துன்புறுத்தலாகாது. இன்னும் எவ்வளவோ! இந்தக் கட்டுப்பாடுகளுக்கெல்லாம் இசைந்தே நாங்கள் காட்டுக்குள் நுழைந்தோம்.

முதலில் இந்தக் கட்டுப்பாட்டினால் ஒருவிதச் சங்கடமும் இருக்காது என்றுதான் நினைத்தேன். ஆனால் உள்ளே போன பிறகுதான் தெரிந்தது. கூட்டமாக வரும் மான்களைப் பார்த்து அலட்சியமாகச் சுட்டுவிட முடியவில்லை. எங்காவது பெண் மான் மேலோ, அல்லது சிறு குட்டியின் மேலோ பட்டு விட்டால் என்ன செய்வது? இது தர்மசங்கடமாக இருந்தது. கண்ணுக்கு எதிரே எத்தனையோ மான்களைப் பார்த்தாலும் சுடக் கூடாத நிலையில் இருப்பது



என்னமோபோல இருந்தது. எங்களோடு வேடிக்கை பார்ப்பதற்காக வந்தவன் ஒருவன் ஒரு கதை சொன்னான். இப்படித்தான் கூட்டம் கூட்டமாக மான்கள் வந்து நின்றனவாம். இதைப் பார்த்து விட்டு அப்பொழுது வந்திருந்த வேட்டைக்காரனுக்குச் சும்மா யிருக்க முடியவில்லையாம்; சட்டென்று துப்பாக்கியை எடுத்துக் 'கூட்டத்தில் கோவிந்தா' என்று சுட்டுவிட்டானாம். என்ன கிடைத்ததாம், தெரியுமா? அழகான பெண் மான்! மனுஷன் விலவிலத்துப் போய் விட்டானாம். பிறகு அங்கிருந்தவர்கள் யோசனையின்படி அந்த மானை அங்கேயே புதைத்து விட்டுத் திரும்பிப் பார்க்காமல் போய் விட்டானாம். இதைச் சொல்லி விட்டு அவன் விழுந்து விழுந்து சிரித்தான்.

அன்று முழுவதும் நானும் பெரிய வீரனும் காட்டுக்குள் அலைந்து கொண்டிருந்தோம். ஆனால் ஒரு மானைக் கூட நாங்கள் சுட முடியவில்லை. ஏனெனில், பெண் மான்களே அதிகம் தென்பட்டன. ஒருகால் அல்லி ராஜ்யமோ என்றுகூடச் சந்தேகம் வந்து விட்டது பெரிய வீரனுக்கு. தப்பித் தவறி ஏதாவது ஆண் மான் கண்ணில் பட்டால், அதன் கொம்பு ஆறு அங்குலத்திற்கு மேல் இருக்குமா என்று நாங்கள் யோசனை செய்து ஒரு முடிவுக்கு வருவதற்குள், அந்த மான் எங்கோ போய்விடும். இதையெல்லாம் பார்க்கும்போது காட்டு இலாக்காவின் முன் யோசனையை எங்களால் புகழாமல் இருக்க முடியவில்லை.

பொழுது சாயும் வரையில் இப்படியேதான் வீணாகக் காட்டைச் சுற்றி அலைந்தோம். மான்கள் செய்த தவப்பயனோ, அல்லது நாங்கள் செய்த பாவத்தின் பயனோ, எங்களுக்கு அன்று வேட்டை பலிக்கவில்லை. கடைசியாகப் பெரிய வீரன் ஒரு காட்டுப் பன்றியைச் சுட்டுப் போட்டான். மான்கள்மேல் வைத்திருந்த ஆத்திரத்தையெல்லாம் அந்தப் பன்றியின்மேல் அவன் காட்டி விட்டான். அன்றெல்லாம் அலைந்த அலைச்சலும், களைப்பும், ஏமாற்றமும் அவனுக்குத் தானே தெரியும்?

ஆனால் எனக்கோ இன்னும் ஆத்திரம் தணியவில்லை. அவனாவது ஒரு பன்றியைச் சுட்டு விட்டான். எனக்கு அது கூடக் கிடைக்கவில்லையே! எப்படியாவது ஒரு மானைச் சுட்ட பிறகுதான் வெளியில் போவது என்று நான் முடிவு செய்து கொண்டேன். இருட்ட ஆரம்பித்தும்கூட நான் சுற்றிக்கொண்டேயிருந்தேன். கால்வலி தாங்காமல் பெரிய வீரன் பின் தங்கி விட்டான். நான் மட்டும் மான் வேட்டையில் மனதைப் பறிகொடுத்து மூலை முடுக்கெல்லாம் புகுந்து பார்த்துக் கொண்டிருந்தேன்.

தாகம் அதிகமாக எடுக்கவே, எங்கேயாவது தண்ணீர் அகப்படுமா என்று அலைந்தேன். நன்றாக இருட்டும் வேளையில் தண்ணீர் என் கண்ணில் பட்டது. சிறிய நீரோடை. இரண்டு கைகளாலும் வாரி வாரிக் குடித்தேன்.

தண்ணீரைக் குடித்ததும் தெளிவு ஏற்பட்டது. அயர்ந்துபோன உடலும் மனமும் கொஞ்சம் ஆறுதல் பெற்றன. இருந்தாலும் கால்கள் மட்டும் நடக்கக் கூடவில்லை என்று கெஞ்சின. அந்த ஓடைக் கரையிலேயே உட்கார்ந்து விட்டேன். கீழே உட்கார்ந்ததும் களைப்பு அதிகமாகத் தோன்றியது. துப்பாக்கியைப் பக்கத்தில் வைத்துவிட்டு அங்கேயே படுத்துக் கொண்டேன். வெகு நேரம் அப்படியேதான் கிடந்தேன். இருள் கவிந்து வந்தது. என்னால் எழுந்திருக்கவே முடியவில்லை. எத்தனை நாழிகை இப்படிச் சென்றதோ தெரியவில்லை; அலுத்துப் போன உடல் எழுந்திருக்க மறுத்து விட்டது.

வெண்ணிலவின் வெளிச்சம் தண்ணீரில் பட்டு மின்னிக் கொண்டிருந்தது. சலசலவென்று வரும் அழகான சிற்றோடையும் நிலவின் ஒளியும் என் தனிமையுமாகக் கலந்து என்னை எங்கெல்லாமோ இழுத்துக்கொண்டு சென்றன. இந்தச் சமயத்தில் என் அருகே யாரோ நடந்து வருவதுபோல் இருக்கவே திரும்பிப் பார்த்தேன்.

என் கண்கள் என்னையே ஏமாற்றுவது போல் எனக்குப் பட்டது. பகல் முழுதும் நான் தேடியலைந்தும் கண்ணில் படாத ஆண் மான் இப்பொழுது என் அருகில் வந்தால் .........! கனவா யிருக்குமோ? இல்லையே! இதோ ஓடை, மேலே சந்திரன், இன்னும் என் பக்கத்தில் துப்பாக்கி!

அந்த மானுக்கு அதன் சூழ்நிலை தெரியாதோ என்னவோ, பயமற்று அது நடந்து சென்று தண்ணீர் குடிக்க ஆரம்பித்தது. என்னை அறியாமலேயே என் கைகள் துப்பாக்கியைப் பற்றின. கடைசியாக என் கஷ்டத்திற்கும், அலைச்சலுக்கும் சரியான பரிசு கிடைத்துவிட்டது என்று மனம் ஆனந்தக் கூத்தாடியது. நெஞ்சம் கும்மாளி போட்டுக் கொக்கரித்தது. சற்று நேரம் அசைவற்று நின்று அந்த மானையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

சட், அழகைக் கண்டால் இந்த மனது அதிலேயே லயித்துவிடுகிறதே!—ஆம்,

தண்ணீரில் அந்த மானின் நிழல் அவ்வளவு அழகாகத் தெரிந்தது!

கன்றுகக் கொழுகொழு வென்று வளர்ந்துவிட்ட கட்டான தேகம்; கிளை விட்டுக் கிடந்த அழகான கொம்புகள்; 'ஆறு அங்குல'த்துக்கும் கவலையில்லை; ஏனெனில் இரண்டடி உயரம் இருக்கும் அவை! இருந்தாலும் சுடுவதற்கு மனம் வரவில்லை. நிலவும் நிழலும், நீரோடையின் சலசலப்பும் என்னை என்னவோ செய்தன.

மறுபடியும் நெஞ்சோடு போராடினேன். நான் பட்ட சிரமத்திற்குப் பலன் வேண்டாமா? வெறுங் கையுடனா காட்டை விட்டு வெளியே போக வேண்டும்? ஊஹூம்; சுட்டுவிட வேண்டியதுதான்!

துப்பாக்கியை எடுத்துத் தோளில் வைத்துக் குறி பார்த்தேன். ஆச்சு, அடுத்த நிமிஷம் அந்த மான் உயிரற்றுப் பிணமாக விழுந்துவிடும்.........!

இந்தச் சமயத்தில் எங்கிருந்தோ துள்ளிக் குதித்தோடி வந்து குறுக்கே நின்றது ஒரு பெண் மான். நான் திகைத்துப்போய் நின்றுவிட்டேன். அதை நான் எதிர்பார்க்கவேயில்லை. சனியன்! இதற்குக் காட்டு இலாக்காவின் உத்தரவுகள் எல்லாம் தெரியுமோ என்னவோ? இல்லாவிட்டால் இப்படி வந்து குறுக்கே நிற்குமா?

மறு நிமிஷம் என் சிந்தனை கலைந்துவிட்டது. அந்தப் பெண் மானையும் கூடச் சுட்டுப் போட்டுவிடும் அளவுக்குக் கோபம் பொங்கி வந்தது. கடவுளே எதிர்த்து வந்து நின்றாலும் தயங்காமல் அந்த ஆண் மானைச் சுட்டுவிடக் கூடிய ஒரு நெஞ்சுத் துணிவும் ஏற்பட்டுவிட்டது.

ஆனால் நடுவே நின்ற பெண் மான் எப்படியோ என்னைக் கட்டுப்படுத்திவிட்டது. ஆண் மானைக் காக்க வந்த அதன் அன்பையும் துணிவையும் மீறி என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை. பரிதாபமாக அது பார்த்த பார்வை என்னை ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது. மருண்ட விழிகளிலே தேங்கி நின்ற சோகப் பார்வை என் இதயத்தின் ஆழத்தைத் தொட்டுவிட்டது. உயிர்ப் பிச்சை கேட்பது போல இருந்த அந்தப் பெண் மானின் பார்வையில் நான் என் மனதைப் பறி கொடுத்து விட்டேன்.

அவ்வளவுதான்; அந்த ஆண் மானுக்கு நான் உயிர்ப்பிச்சை அளித்துவிட்டேன்!

அப்புறம் என்ன? ஆண் மானும் பெண் மானும் அந்த நிலவொளியில் ஆனந்தமாகத் துள்ளி ஓடி மறைந்தன. போகும்போது அவை இரண்டும் என்னை நன்றியறிதலுடன் பார்த்த பார்வை இன்னும் என் கண் முன்னே நிற்கிறது. ஏதோ ஒரு மகத்தான காரியத்தைச் செய்து முடித்தவன்போல் நான் காட்டை விட்டு வெளியே வந்து சேர்ந்தேன். எனக்காகக் காத்திருந்த பெரியவரிடம் இந்தக் கதையைச் சொன்னேன். அவன் காட்டு ஜாதியைச் சேர்ந்தவனாயிருந்தாலும்கூட இந்த அன்பைப் புரிந்துகொண்டு விட்டான். இதுதான் கடைசி முறையாக நான் வேட்டைக்குப் போனது. பிறகு நான் போகவேயில்லை. இப்பொழுது நினைத்தாலும் அந்த மானின் மருண்ட விழிகள் என் கண் முன்னே வந்து நிற்கின்றன. இந்தச் சம்பவத்தை என் உயிருள்ள வரை மறக்க முடியுமா, என்ன?

* * *

கதையை முடித்துவிட்டுக் காப்டன் ஜான் எங்களைப் பார்த்தார். நாங்கள் அந்த மானைப் பற்றிக் கனவுகள் கண்டு கொண்டிருந்தோம். அவருக்குப் பதில் சொல்ல நாங்கள் முயல்வதற்குள் மணமகளும் மாப்பிள்ளையும் வந்து சேர்ந்தார்கள். பெரியவர்கள் அவர்கள் இருவரையும் ஆசீர்வதித்தார்கள்.

"துள்ளிக் குதித்தோடி வந்து குறுக்கே நிற்கும் அந்த அன்பும் மனத் துணிவும் உங்களுக்கும் இருக்கட்டும். உங்கள் தாம்பத்ய வாழ்க்கை அந்த மான்களுடையது போலவே என்றும் விளங்கட்டும்!" என்று நான் வாழ்த்திவிட்டுத் திரும்பினேன்.

காப்டன் ஜான் நான் சொன்னதை அப்படியே ஆமோதிப்பது போல் என் மேல் பன்னீரைத் தெளித்து மகிழ்ந்தார்.

## முதல் பிரச்னை!



பிரசங்கி:—தூங்கிக் கொண்டிருக்கும் தோழர்களை தட்டி எழுப்ப வேண்டியது நம் முன்னுள்ள முதல் பிரச்னை......!

# யாரும் பிரமிக்கிறார்கள்

"அதைவிட விலை அதிகமல்லவா"

என்கிறார்கள்

உண்மையில் அப்படியில்லை. இது வரை உற்பத்தி செய்யப்பட்ட பௌண்டன் பேனாக்களுள் மதிப்பிற் சிறந்தது புதிய கோல்டன் ப்ளாட்டினம் பேனாதான். என் இரேல் செய்த மூடி - பல்வேறு வர்ணக் கவர்ச்சி - இயாதி வாய்ந்த ப்ளாட்டினம் முள், ஆகியவைகளுடன் கூடிய இந்த நவநாகரிகப் பேனாவை உபயோகித்தால்தான் நம்ப முடியும்.

புதிய

கோல்டன்

ரூ. 5-

# Platignum

REGD

பௌண்டன் பேனா

இங்கிலாந்தில் செய்யப்பட்டது

வர்த்தக விசாரணைகளுக்கு
முழு உரிமை பெற்ற
வினியோகஸ்தர்கள்:

முல்லர் & பிப்ஸ் (இந்தியா)
லிமிடெட்
15, கங்குராம செட்டி தெரு, மதராஸ்

# அம்புலுவின் ஆசை

அம்மு

பளைபளைக்கும் வெய்யிலில், தன் சிநேகிதி வீட்டிற்குச் சென்றுவிட்டுத் திரும்பினாள் அம்புலு. அவள் முகத்திலே எள்ளும் கொள்ளும் வெடித்தன. வெய்யிலில் அலைந்ததனால் என்று நீங்கள் நினைப்பீர்கள். அதுதான் இல்லை; அவள் மனதிலே குமுறிக் கொண்டிருந்ததை அம்மாவிடம் சொல்லி, அம்மாவையும் இரண்டு வசவு வைதால்தான் அவள் ஆத்திரம் தீரும்போல் தோன்றியது.

இத்தனை அவமானத்திற்கும் அம்மா தானே காரணம்?—இப்படி எண்ணிக் கோபத்துடன் உள்ளே வந்தவள், நாற்காலியில் ஆயாசத்துடன் உட்கார்ந்து விட்டாள். அம்மா தாழ்வாரத்தில் இருப்பாள், வந்ததும் 'பிடிபிடி' என்று பிடித்துக் கொள்ளலாமென்று நினைத்திருந்தாள். ஆனால் அம்மா கொல்லைப் புறம் இருக்கவே, சண்டை பிடிக்குமிடம் அதுவல்லவென்று எண்ணி, அவள் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

கையில் ஒரு மூட்டை துணியை எடுத்துக்கொண்டு அம்மா தாழ்வாரத்திற்கு வந்தாள். அம்புலு மூஞ்சியை 'உர்' என்று வைத்துக் கொண்டிருந்ததைத் தவிர, பேசவில்லை. அம்மா ஆரம்பிக்க வேண்டுமென்பது அவள் எண்ணம்.

"வெய்யில் வீணாகாமல் சுற்றிவிட்டு வந்தாயா? மூஞ்சியைப் பாரு, மூஞ்சியை!" என்றாள் அம்மா.

"நீ பெயர் வைத்திருக்கிற அழகுபோல் தானே இருக்கும் மூஞ்சியும்!" என்று ஆரம்பித்தாள் அம்புலு.

"ஏன், உன் பெயருக்கென்ன?"

"ஹும்! மகா பேரு! வைத்தாயே அம்புலு அம்புலுன்னு! வேறே பெயரே அகப்படவில்லையா?"

"அந்தப் பெயருக்கென்னடீ? அலமேலுங்கிற சுவாமி பெயரை அம்புலுன்னு கூப்பிடறது! அதிலே என்ன குறைஞ்சு போச்சு?"

"உனக்கொன்னும் குறைஞ்சு போகாது! 'எச்சி'ன்னு கூப்பிட்டாலும் 'ஏன்'னு கேட்பே! இந்த மட்டமான பெயரைக் கேட்டு எத்தனை பேர் என்னைப் பரிகாசம் பண்றா, தெரியுமா? அலமேலுவாம், அலமேலு!"

"சுவாமி பெயரைப் பழிக்காதேடி! கன்னத்திலே போட்டுக்கோ!" என்று ஆவேசம் வந்தவள் போல் அம்மா அலறினாள். ஆனால் அம்புலு அசையவில்லை. இந்தப் பயமுறுத்தல்களுக்கெல்லாம் ஒடுங்கும் பேர்வழி அவளில்லை. "ஆமாம், சுவாமி வந்து மூக்கை நறுக்கிவிடும்!" என்று அம்மாவைப் பரிகாசம் செய்தாள். அதற்குப் பிறகும் அவள் சும்மா இருக்கவில்லை. மேலும் மேலும் முணுமுணுக்கத் தொடங்கினாள். "ஒவ்வொருத்தர் எவ்வளவோ அழகழகாகப் பெயர் வைக்கிறார்கள், வனஜா, சரோஜான்னு! இதுகள் என்னடாவென்றால், அம்புலுவாம், அம்புலு!" என்று ஓயாமல் புலம்பினாள்.

"எல்லாம் தலைமுறைப் போனாப்போலே பெயர் வைக்கிறதையும் மாற்றி விட வேண்டியதுதான்! குழந்தையாயிருக்கிறபோது பெயர் வைக்காமல் வயசான பிறகு 'உனக்கு எந்தப் பெயர் பிடிக்கிறது?' என்று கேட்டுச் செய்ய வேண்டியதுதான்! இனிமேல் அப்படித்தான் செய்யணும்!" என்று சொல்லிச் சிரித்தாள் அம்மா.

அம்புலு அழுங்குரலில், "எத்தனையோ பேர் நல்ல பெயராக வைக்கவில்லையா?" என்றாள்.

இந்தச் சமயம் அப்பா வந்தார். ரேழியில் வரும்பொழுதே பெண்ணின் அழுகைக் குரல் அவர் காதில் விழுந்து விட்டது. "இந்த வெய்யில் நேரத்தில் அவளை ஏன் அழவிடுகிறாய்?" என்றார் அவர் சிரித்துக்கொண்டே. அம்புலுவின் சுபாவம் அவருக்குத் தெரியும்.

"அவளுக்குப் பெயர் நன்னா வைக்கவில்லையாம்! 'பொது பொது'ன்னு என்கிட்டே சண்டைக்கு வருகிறாள்!" என்று சிரித்தாள் அம்மா.

"இவ்வளவுதானே? இதற்கு அழுவானேன், சண்டை போடுவானேன்? ஒரு நிமிஷத்தில் மாற்றி விட்டால் போச்சு!" என்று சமாதானம் கூறிவிட்டுச் சட்டையைக் கழற்றத் தொடங்கினார் அப்பா.

அம்புலு மறுபடியும் முணுமுணுத்தாள். அவள் சமாதானம் அடையாததைக் கண்ட அப்பா, "இதோ பார், அம்புலு! இந்தச் சின்ன விஷயங்களுக்

கெல்லாம் யாராவது அழுவார்களா? எத்தனையோ பேருக்கு மண்ணாங்கட்டி, பிச்சைன்னு பேரிருக்கு! அந்தப் பெயர் பிடிக்காமற் போனால் ஜோரான பெயராக மாற்றிக் கொண்டு விடுகிறார்கள்; அவ்வளவுதானே! நீயும் ஏதாவது நல்ல பெயரா மாற்றிக் கொண்டுவிடு!'' என்றார்.

இது பரிகாசமா, அல்லது உண்மையா என்று அம்புலுவுக்கு விளங்கவில்லை. அது எப்படியிருந்த போதிலும் அப்பாவின் யோசனை அவளுக்கு ரொம்பவும் பிடித்திருந்தது. 'ஆமாம், அப்படிச் செய்வதுதான் சரி! இல்லாவிட்டால் எத்தனை அவமானம்!' என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டாள்.

★



அன்று அவள் சரளா வீட்டிற்குச் சென்றிருந்தாள். அங்கே அவள் தோழிகள் பலர் வந்திருந்தனர். எல்லோருடைய பெயரும் ஸ்வர்ணமுகி, சூரியபிரபா என்று நாகரிகமாக இருந்தது. அம்புலுவைப் பெயர் என்னவென்று கேட்டனர். அம்புலு யோசித்தாள்—'அம்புலு என்று சொல்வதா, அலமேலு என்று சொல்வதா?' என்று. கடைசியில் சட்டென்று அவள் வாயிலிருந்து 'அம்புலு' என்ற பெயர் வந்துவிட்டது. அவ்வளவுதான்; தோழிகள் அத்தனை பேரும் 'கொல்' லென்று சிரித்துவிட்டனர். "அம்புலுவா! இதென்ன பெயர்?" என்றாள் ஒருத்தி. "இந்த நாளிலே இந்தமாதிரி பெயர்கூட உண்டா?" என்று ஆச்சரியப்பட்டாள் இன்னொருத்தி. அம்புலுவிற்கு அழுகை வந்துவிட்டது. எப்படியோ கண்ணீர் விடாமல் சமாளித்துக் கொண்டாள். இவர்கள் 'கோட்டா' முடிந்ததும் தனக்குப் பெயர் வைத்த பெற்றோர்கள் மீது கோபித்துக் கொண்டு வீட்டிற்குத் திரும்பினாள்.

அப்பா பெயரை மாற்றிக் கொள்ளும்படி கூறியதும், எந்தப் பெயரைத் தேர்ந்தெடுப்பது என்ற யோசனையில் ஆழ்ந்தாள் அம்புலு. கடைசியில் 'ஸ்வர்ணலதா' என்ற பெயரைப் பொறுக்கினாள். இது மிகவும் அவளுக்குப் பிடித்திருந்தது. உடனே தன் புத்தகங்கள், நோட்டுகள் எல்லாவற்றிலும் 'ஸ்வர்ணலதா, ஸ்வர்ணலதா' என்று எழுதினாள். 'அம்புலு, அலமேலு' வெல்லாம் அடிபட்டு விட்டன. பிறகு தன் தம்பி தங்கைகளைக் கூப்பிட்டாள். அவர்களிடம் விஷயத்தைச் சொன்னாள். உடனே பெரிய தம்பி 'போக்' கென்று சிரித்து விட்டான். "உருளைக்கிழங்கு மாதிரி இருந்துண்டு ஸ்வர்ணலதாவாம்! ஐயே, பொற் கொடியே!'' என்று பரிகாசத்துடன் சொல்லிக் குதித்தான். அம்புலுவுக்கு இல்லை......ஸ்வர்ணலதாவுக்கு (பாவம், நாமாவது அவள் புதுப் பெயரைச் சொல்வோமே!) அசாத்திய கோபம் வந்துவிட்டது. "தடியா! நான் குண்டாவா இருக்கேன்!'' என்று கூவிக்கொண்டு அவனை அடிப்பதற்காகத் துடித்து எழுந்தாள். ஆனால், அவனா இவள் கையில் அகப்படுவான்? "சரி! உருளைக் கிழங்கு மாதிரி யில்லாவிட்டால், 'பொட்டேடோ' என்று வைத்துக் கொள்ளேன்!'' என்று சொல்லிவிட்டு ஓட்டம் பிடித்தான்.

"க......போறவனே! வா, சொல்றேன்!'' என்று பல்லைக் கடித்துக்கொண்டு தன் இடத்தில் வந்து உட்கார்ந்து கொண்டாள். அம்...... இல்லை, ஸ்வர்ணலதா. மற்ற தம்பி தங்கைகளிடம் தன் பெயரை கெட்டுருப் பண்ணுவதற்

குப் பழக்கிக் கொடுத்தாள். "பாபு! இனிமேல் என்னை 'அம்புஜு'ன்னு கூப்பிடக் கூடாது! 'ஸ்வர்ணலதா'ன்னு கூப்பிடணும்! தெரிஞ்சுதா? எங்கே, கூப்பிடு பார்க்கலாம்!" என்றாள்.

பாபு முதலில் அந்தப் பெயரை உச்சரிப்பதற்கே சிரமப்பட்டான். கடைசியில் மூக்கி முனகி, 'சர்ணதலா' என்றான். எல்லோரும் சிரித்து விட்டனர். பாபுவுக்கு அவமானமாகப் போய்விட்டது. "நான் சொல்ல முடியாது, போ!" என்று சொல்லிவிட்டு ஓடி விட்டான்.

மற்ற சகோதரிகளுக்கு என்னதான் அம்புஜு கராடியாய்க் கத்திப் பெயர் சொல்லிக் கொடுத்த போதிலும், அவர்கள் 'அம்...' என்று ஆரம்பித்துப் பிறகுதான் 'ஸ்வர்ணலதா'வுக்கு வந்தார்கள். அம்மா, தான் வைத்த பெயரைச் சொல்லிக் கூப்பிட்டாளே தவிர, பெண்ணின் அழகிய பெயரைச் சொல்லிக் கூப்பிடவில்லை. அந்தப் பெயர் வேண்டாம் என்றால் 'பழக்கமாய்ப் போய்விட்டது. அதுதான் வருகிறது!' என்றாள். அப்பா அவள் விருப்பப்படி புதுப் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டாலும் அதிலே பரிகாசம் அதிகமாய்க் கலந்திருக்கிறது. அம்... இல்லை ஸ்வர்ணலதாவுக்கு என்ன செய்தென்றே தெரியவில்லை. தான் பெயரை மாற்றிக் கொண்டாலும் அது அமலில் வரவில்லையே என்ற வருத்தம் சகிக்க முடியாததாவிருந்தது. தீவிரமாக யோசித்த அவளுக்கு 'டக்'கென்று விடை கிடைத்தது. ஆம், அப்பா வரன் பார்த்துக் கொண்டிருக்கிறார். கலியாணமென்று நடந்தால், வரப்போகும் 'அவர்' ஏதாவது அன்புப் பெயர் நவீனமாக வைத்துக் கூப்பிடத்தான் செய்வார். இதை நினைத்த அம் இல்லை......ஸ்வர்ணலதா சந்தோஷத்தால் பூரித்துப் போனாள்.

★

நான் எண்ணியது போலவே தன் மனதுக்குப் பிடித்த மணாளனை வரித்தாள் அம்புஜு என்ற ஸ்வர்ணலதா. 'பெண் பிடித்திருக்கிறது' என்று அவள் நாயகன் கூறினானே தவிர, பெயர் பிடித்திருக்கிறதா என்பது அவளுக்கு விளங்கவில்லை. பெரியவர்களும் அதைக் கேட்கவில்லை. அம்புஜுவுக்குத்தான் இது பெரிய பிரச்னையாக விருந்தது.

கலியாணம் இனிது நடந்தது. அதற்குப் பிறகும் அவள் பெயரைப் பற்றி ஒருவரும் குறை கூறவில்லை.

ஒரு மாதம் சென்றது. அவள் கணவனிடமிருந்து கடிதம் வந்தது. அவசரமாகப் பிரித்தாள். தன் கணவனின் அன்புப் பெயரை அதில் காணலாமல்லவா? ஆனால், என்ன ஏமாற்றம்! கடிதம் 'அருமை அம்புஜுவுக்கு' என்று ஆரம்பித்திருந்தது. அம்...... இல்லை, ஸ்வர்ணலதா மயக்கம் போடும் நிலைக்கு வந்துவிட்டாள். இவ்வளவு கர்நாடகமா தன் கணவர்? பார்த்தால் கிராப்பும் பையில் சீப்புமாக இருக்கிறாரே! அம்புஜு அசந்துவிட்டாள். பிறகு ஒருவாறு மனதைத் தேற்றிக் கொண்டு கடிதத்தை முழுதும் படித்தாள். கடிதம் பூராவும் அன்புப் பெருக்குத்தான்! இதனால் அவள் பூரிப்படைந்த போதிலும் அந்த முதல் வரியிலே மட்டும் மனம் ஒடிந்துவிட்டாள்.

அன்றே தன் கணவருக்கு அவள் பதில் கடிதம் எழுதினாள். 'அன்பு மிக்க கணவருக்கு' என்று ஆரம்பித்து, தன் காதலை எழுத்தோவியமாகத் தீட்டினாள். கடைசியில் தன் மனக் குறையையும் எழுதினாள். என்னவென்று பாருங்கள்!

"அம்புஜு என்ற பெயரை நான் மிக மிக வெறுக்கிறேன். வேறு பெயர் மாற்றிக் கொண்டு எல்லோரையும் அப் பெயரால் கூப்பிடச் சொன்னேன். ஆனால் என் புதுப் பெயருக்குப் பலன் கிடைக்கவில்லை. ஒருவரும் அந்தப் பெயரால் என்னைக் கூப்பிடவில்லை. கடைசியில் என் ஆசை உங்களாலாவது நிறைவேறுமென நம்பியிருந்தேன். அன்பு மிக்க கணவராகிய நீங்கள் அழகிய பெயரால் என்னை அழைப்பீர்களென ஆவலுடனிருந்தேன். ஆனால் தாங்களும் இந்தப் படி கர்நாடகப் பெயரால் அழைத்திருப்பது எனக்கு மிகவும் வருத்தமாயிருக்கிறது. வேறு பெயரே உங்களுக்கு அகப்படவில்லையா......?"

இப்படியாக அவள் பக்கம் பக்கமாகத் தன் பெயரைப் பற்றிப் பிரலாபித்திருந்தாள். கடிதத்தைத் தபால் பெட்டியில் சேர்த்து விட்டு,



பதிலை ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருந்தாள். பதிலும் வந்தது. அவள் கணவர் எழுதியிருந்தார்.

"அருமை அம்புஜுவுக்கு!

உன் கடிதம் கிடைத்தது. 'அம்புஜு' என்ற பெயருக்காக நீ ஏன் இப்படி வருந்த வேண்டும்? நீ அம்புஜமாயிருந்தாலென்ன, அமிருதவல்லியாயிருந்தாலென்ன? என் இதயத்தை அபகரித்துக் கொண்ட அழகு சுந்தரி நீ! உன்னைப் பார்த்ததிலிருந்து, உன் பெயர் எப்படியிருந்தபோதிலும் அப்படியே கூப்பிட நான் தயாராகி விட்டேன். 'பெயரில் என்ன இருக்கிறது?' என்று மகாகவியான ஷேக்ஸ்பியர் ஓரிடத்தில் கூறுகிறார். அப்படியிருக்கும்போது நீ வீணாக ஏன் மனதை அலட்டிக் கொள்கிறாய்? இப்பொழுது பழைய நாள் விஷயங்கள்தானே புது நாகரீகமாய் மாறியிருக்கிறது? நீ காதில் போட்டுக் கொண்டிருக்கிறாயே ஜிமிக்கி, அது கர்நாடக நகைதான்' பாட்டிகளும், அம்மாக்களும் போட்டுக் கொண்டிருந்த ரவிக்கைதான் இப்பொழுது 'சோலி'யாக மாறியிருக்கிறது. ஆதலால், என் அருமை அம்புஜு! உன் பெயரும் 'பாஷ'னாகும் காலம் வரும்...."

இப்படியாக அம்புஜுவின் கணவர் பத்துப் பக்கம் வரிந்து வரிந்து எழுதியிருந்தார். கடிதம் முழுவதையும் படித்துப் பார்த்த பிறகு, அம்புஜு யோசித்தாள். "ஆமாம்! 'அவர்' சொல்லுவதில் என்ன தப்பு இருக்கிறது? இப்பொழுது பாட்டி கால விஷயங்கள்தானே புது ரூபத்தில் கிளம்பியிருக்கின்றன? அதுவும் அவரே இந்தப் பெயர் பிடித்திருக்கிறது என்று சொல்லும்பொழுது நாம் ஏன் அதற்காக வருந்த வேண்டும்?" என்று எண்ணி ஆறுதலடைந்தாள்.

அடுத்த நிமிஷம் அம்புஜு (இனி மேல் நாமும் அவள் கணவர் கூறியதையே கடைப் பிடிப்போம்!) ஒரு தீர்மானத்திற்கு வந்தாள். சட்டென்று எழுந்து சென்று நோட்டு புத்தகம் எல்லாவற்றிலும் எழுதியிருந்த 'ஸ்வர்ணலதா' என்ற பெயரை அடித்து விட்டு, 'அலமேலு' என்று எழுதி விட்டாள்!

# காலக்ஷேபம்

"ராஜூ! நீ என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்வாயா, மாட்டாயா?"

"நான் உங்களைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள முடியாது. ஏனென்றால் நான் தைரியமும் சாமர்த்தியமுமுள்ள வாலிபனுக்கே மாலையிடுவதாகத் தீர்மானித்திருக்கிறேன்."

"ஓகோ, அப்படியா! நேற்றைய தினம் படகு கவிழ்ந்தபோது நான் உன்னைக் காப்பாற்றவில்லையா?"

"ஆமாம்; அதனால் உங்களைத் தைரியசாலி என்று ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் உங்களைச் சாமர்த்தியசாலி என்று எப்படி ஒப்புக்கொள்ள முடியும்?"

"ஏன், நான் அதற்காக வேண்டித் தானே படகைக் கவிழ்த்தேன்?"

★

கணவன்:—என்ன, இன்றைக்குச் சமையல் ரொம்ப ரொம்ப நன்றாயிருக்கிறதே! உனக்குத் தெரிந்த யாரையேனும் நீ சாப்பிட வரச் சொல்லியிருக்கிறாயா, என்ன?

மனைவி:—நான் சொல்லவில்லை; சமையற்காரனைத் தேடிக் கொண்டுதான் யாரோ விருந்தாளி வந்திருக்கிறாப்போலிருக்கிறது!



வக்கீல்:—தங்கள் கேஸைப் பற்றி என் மனதுக்கு நியாயமாகத் தோன்றுவதைச் சொல்ல வேண்டுமென்றால்......

கட்சிக்காரர்:—அது வேண்டியதில்லை. வக்கீல் என்ற முறையில் தங்களுக்கு என்ன தோன்றுகிறது?

★

ஒரு ஸிவில் கேஸ் விசாரணையில் சாட்சி சொல்ல வந்த ராமநாதன் தன் பையன் குப்புவையும் கோர்ட்டுக்கு அழைத்துக் கொண்டு போயிருந்தான்.

வக்கீல் (குறுக்கு விசாரணையில்):—உமக்கு எத்தனை குழந்தைகள்?

ராமநாதன்:—சொல்லுகிறேன்; செல்லம், பிச்சா, அம்புஜு, மைத்திலி, சுப்பு, ராஜீ.........

குப்பு (வெளியிலிருந்தபடி):—அப்பா! என்னை மறந்து போய்விட்டீரே, அப்பா!

★

டாக்டர்:—கவலைப்படாதீர்கள்! முதல் இன்ஜெக்ஷன் கொஞ்சம் வலிக்கும்; இரண்டாவது இன்ஜெக்ஷன் வலிக்கவே வலிக்காது.

நோயாளி:—டாக்டர் ஸார்! அப்படியானால் இரண்டாவது இன்ஜெக்ஷனைத்தான் இப்பொழுது கொடுங்களேன்!

# பதில் என்ன?



வி. எஸ். ஸ்ரீனிவாஸன்

இரண்டாவது வார வெள்ளிக்கிழமை தினம். கண்ணெழுத்து மங்கும் மாலைப் பொழுது. அப்பொழுதுதான் அம்மன் கோவிலுக்குப் போய்விட்டு நானும் மன்னியும் வீட்டுக்குத் திரும்பி வந்தோம். வழக்கத்தைவிட வெகு சீக்கிரமாகவே அன்று ஆபீஸிலிருந்து வந்துவிட்ட அண்ணா ராமு, முன் அறையில் வேறு யாருடனோ பேசிக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

என்னைப் பார்த்ததும், "வேதா, இரண்டு டம்ளரில் காப்பி கொண்டுவா!" என்றான்.

"வேண்டாம், வேண்டாம், நான் காப்பி சாப்பிடுவதில்லை" என்று சற்று வெட்கத்துடன் சொன்னார் அண்ணாவுடன் பேசிக்கொண்டிருந்தவர்.

'இந்த இருபதாம் நூற்றாண்டிலுமா காப்பி சாப்பிடாதவர்கள் இருக்கிறார்கள்?' என்ற அதிசயத்தினாலோ என்னவோ, ராமு 'களுக்'கென்று சிரித்து விட்டான். நான் அந்தப் புதிய நண்பரைப் பார்த்தேன். கம்பீரமும் குறுகுறுப்பும் ததும்பிய அவருடைய களையான வதனம், என் வாழ்வில் அதுவரை நான் அனுபவித்திராத ஒருவகை உணர்ச்சியை உண்டாக்கியது. ஒரு நிமிஷம் நான் என்னையே மறந்துவிட்டேன்.

"எனக்குக் காப்பியும் பத்மநாபனுக்குக் கொஞ்சம் பிஸ்கட்டும் கொண்டுவா" என்றான் அண்ணா.

அன்றுதான் பத்மநாபனுக்கும் எங்களுக்கும் அறிமுகம் ஆயிற்று. பிறகு, தினந்தோறும் மாலையில் அண்ணாவிடம் 'ஷார்ட் ஹாண்ட்' கற்றுக் கொள்வதற்காக அவர் எங்கள் வீட்டுக்கு வருவார். அவர் எங்கள் வீட்டில் தங்கும் அந்த ஒருமணி நேரம் முழுவதும் சொல்லாலும் எழுத்தாலும் எடுத்துக் காட்ட முடியாத மகிழ்ச்சி வெள்ளத்தில் நான் நீந்தி மகிழ்வேன்.

அவர் அண்ணாவுடைய ஆபீஸில் புதிதாகச் சேர்ந்தவராம். கவலையின்றி கல்வியை மேலும் விருத்தி செய்துகொள்ள வேண்டிய இளமைப் பருவத்திலே, ஏழை என்ற ஒரு காரணத்தினால் இயந்திர வாழ்க்கையைப் போன்ற குமாஸ்தாத் தொழிலில் திணிக்கப்பட்டு விட்டாராம். முதலில் கொஞ்சம் கூச்சமுடனும் சங்கோசமுடனும் பழகி வந்த அவர் நாளாவட்டத்தில் கலகலவென்று பேசிக்கொண்டு எங்கள் குடும்பத்தில் ஒருவர் போலாகி விட்டார். அப்பழுக்கற்ற தூய மனம் படைத்திருந்த அவரிடம் அண்ணாவுக்கு ஒரு தனிப் பிரியம்.

2

வயது வந்த எனக்குக் கல்யாணம் செய்து வைக்க முயன்று வந்தான் ராமு. அதற்காக விடுமுறை நாட்களில்கூட அவன் வெளியூர்களுக்குப் போய் அலைந்துவிட்டு வருவதுண்டு. எனக்கு மட்டும் அது கட்டோடு பிடிக்கவில்லை. முன்பின் தெரியாத யாரோ ஒருவருடன் வாழ்க்கை நடத்துவது என்பதை என்னால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லை. அப்படி வாழ்வதைவிட என்றைக்குமே கல்யாணமாகாமலே இருப்பது எவ்வளவோ மேல்.

என் மனம் பத்மநாபனைத் தவிர வேறு யாரையுமே நாடவில்லை. அவரைத் தவிர வேறு யாருடனாவது வாழ முடியும் என்று நான் கருதவில்லை. ஆனால், 'நானாக அளிக்கும் என் காதலை பத்மநாபன் ஏற்றுக் கொள்வாரா?' என்ற சந்தேகம் என் மனதில் ஓயாமல் எழுந்துகொண்டே இருந்தது. ஒளிவு மறைவற்ற அவர் பேச்சிலும் விஷமமற்ற அவருடைய புன்சிரிப்பிலும் அவருக்கு என்மேல் பிரியம் இருக்கிறது என்பதை ஓரளவு தெரிந்து கொண்டேன். ஆனால் அவர் உண்மையில் என்னை விரும்புகிறாரா, அல்லது என் நிலைமையைக் கண்டு ஏளனம் செய்கிறாரா என்பது மட்டும் விடை கண்டு பிடிக்க முடியாத ஒரு கடினமான புதிராகவே இருந்தது. அதைச் சோதித்துவிடத் துணிந்தேன்.

அன்று சாயங்காலம் அண்ணா மன்னியை அழைத்துக்கொண்டு டாக்டர் வீட்டுக்குப் போயிருந்தான். வழக்கம் போலவே பத்மநாபன் வந்தார்.

"ராமு எங்கே?" என்று கேட்டார் பத்மநாபன்.

"இதோ வந்துவிடுவான். நீங்கள் வந்தால் இங்கேயே இருக்கும்படி சொல்லச்

சொன்னான்" என்று மனமறியப் பொய் ஒன்றைச் சொல்லி அவரை உள்ளே அழைத்தேன். வந்தபடியே திரும்பிப் போய் விடுவாரோ என்ற பயம் எனக்கு!

உயிருள்ள தந்தப் பதுமையைப் போல் நாற்காலியில் கம்பீரமாக வந்து அமர்ந்து கொண்டு, மேஜைமீது கிடந்த ஒரு பத்திரிகையைப் பிரித்துப் படித்துக் கொண்டிருந்தார் பத்மநாபன்.

சொல்ல முடியாத ஏதோ ஒரு வகையான உத்வேகம் என்னை உந்தித் தள்ளிற்று. நான் அடுத்த அறைக்குப் போய் பரபரவென்று ஒரு சிறு கடிதம் எழுத ஆரம்பித்தேன். வெகு நாளாக என் மனதில் உள்ள ஆவலையும் எண்ணத்தையும் அப்படியே கடிதத்தில் கொட்டி அதை பத்மநாபனிடம் கொடுக்க ஆசைப்பட்டேன். ஆனால், பாழும் வார்த்தைகள் கோவையாக எழுத்தில் வந்தால்தானே! எப்படியோ 'தாமா சோமா' வென்று அதை எழுதி முடித்தும் விட்டேன். வாக்கியங்கள் அழகாக அமையா விட்டாலும், நடுங்கும் கரத்திலிருந்து வெளிவந்த அந்த எழுத்துக்கள் நிச்சயமாக என் இதய வேதனையை அவருக்கு எடுத்துக்காட்டி விடாதா என்ற நம்பிக்கையுடன் மெள்ள அவரிடம் கொண்டு போய்க் கொடுத்தேன்.

அவர் பிரமித்துப் போனார். அவர் கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்த போது, அவர் முகத்தையே என் கண்கள் உற்று நோக்கிக் கொண்டிருந்தன. ஆனால் பேதையாகிய நான், கடிதத்தைப் படித்து விட்டு அவர் என்ன நினைக்கிறார் என்பதை மாத்திரம் சரியாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை!

"வேதா, நான் போய் வருகிறேன். ராமு வந்தால் வரச்சொல்" என்று சொல்லிவிட்டு அப்படியே எழுந்து போய் விட்டார். ஒரு வார்த்தைகூடப் பேசவே இல்லை.

எனக்கு அளவு கடந்த ஏமாற்றம் உண்டாயிற்று. அவர் இப்படி ஒரு வார்த்தைகூடப் பதில் சொல்லாமல் எழுந்து போவார் என்று நான் கொஞ்சங்கூட எதிர்பார்க்கவே இல்லை. இனி நான் எப்படி நினைப்பது? அவருக்கு என்னைப் பிடிக்கவில்லையா? என்னைக் கல்யாணம் செய்து கொள்ள அவருக்கு விருப்பம் இல்லையா? ஐயோ, அப்படியானால் என்ன செய்வது? என் துக்கம் தாங்க முடியாமல் மேஜை மீது முகத்தை வைத்துக்கொண்டு தேம்பித் தேம்பி அழுதேன்.

3

நாட்கள் பல கழிந்தன. தினம் தவறாமல் வந்து போகும் பத்மநாபன், அன்று முதல் எங்கள் வீட்டுக்கு வருவதை அடியோடு நிறுத்திவிட்டார். என்னுடைய முட்டாள் தனத்தை நான் மிகவும் நொந்து கொண்டேன்.

ஒரு நாள் மாலை மணி நான்கு அடித்ததும், மன்னி என்னை அவசரமாக அழைத்து விசேஷமாக அலங்கரித்தாள். முதலில் எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. பிறகு என்னைப் பார்க்க யாரோ வரப் போகிறார்கள் என்பதை அறிந்து உற்சாகமற்றிருந்தேன் நான். மாலையில் வயதான ஒரு பெரியவரும் நடுத்தர வயதுடைய மற்றொருவரும் வந்தார்கள். அண்ணா என்னை அழைத்து அவர்களை நமஸ்கரிக்கச் சொன்னான். பிறகு மன்னி என்னைப் பாடும்படி உள்ளிருந்தபடியே சொன்னாள். எனக்குத் தெரிந்த ஒரு பாட்டை அரைகுறையாகப் பாடி முடித்தேன். அப்போது என் மனம் என்னவெல்லாமோ எண்ணி ஏங்கியது. ஒரு வேளை பணச் செலவுக்குப் பயந்துகொண்டு என்னை அந்தக் கிழவருக்கு இரண்டாம் தாரமாகக் கொடுக்க அண்ணாவும் மன்னியும் சதிசெய்து விட்டார்களோ? பேசாமல் என் அறைக்குப் போய்ப் படுத்து விட்டேன்.

எவ்வளவு நேரம் அப்படிப் படுத்துக் கொண்டிருந்தேனோ எனக்குத் தெரியாது. கண்ணைக் கசக்கிக்கொண்டு எழுந்து பார்த்தபோது இரவு வெகு நேரமாகி விட்டதுபோலத் தோன்றியது. அப்போது யாரோ "வேதா!" "வேதா!" என்று என்னை அழைப்பதுபோல இருந்தது. திரும்பிப் பார்த்தேன். என்ன ஆச்சரியம், என் கண்களை நம்ப முடியவில்லை. பத்மநாபன் அங்கே நின்று கொண்டிருந்தார்! அருகில் அண்ணாவும் மன்னியும் நின்று கொண்டிருந்தார்கள்.

"வேதா, பத்மநாபன் உன்னையே கல்யாணம் செய்து கொள்வேன் என்று ஒரே பிடிவாதம் பண்ணி ஊருக்குப் போய் அவனுடைய அப்பாவையும் இப்போது கையோடு அழைத்துக் கொண்டு வந்து விட்டான் பார்த்தாயா?" என்றான் அண்ணா.

என்னால் இதை நம்பவே முடியவில்லை; வெட்கத்தால் தலை கவிழ்த்தேன்.




# லிப்டன்ஸ்

## என்றால்

## முதல்தரமான டீ

ITX-151-TM




(சென்ற வாரத் தொடர்ச்சி)

அருணாசலத்துக்குக் கொஞ்சம் சொந்த நிலமும் ஒரு பழைய வீடும் இருந்தது. இதை வைத்துக்கொண்டு அந்த கிராமத்தில் அவன் சுகமாக வாழ்வதற்கு இடையூறாக எவ்வளவோ கஷ்டங்கள் அவனைச் சூழ்ந்து நின்றன. ஆனால் அவன் தன் கஷ்டங்களைப் பெரிதாக்கிக் கொள்ளாமல் எப்பொழுதும் சந்தோஷமாகத் தான் வாழ்ந்து வந்தான்.

ஆறு வருடங்கள் ஓடிவிட்டன. சின்னக் கருப்பனும் இறந்து விட்டான். ஞானமும் அருணாசலமும் எவ்விதக் குறையுமின்றி குடித்தனம் நடத்தி வருவதாகத்தான் ஊரார் நினைக்கும்படியாய் இருந்தது. ஆனால் எவ்வளவோ கஷ்டங்களை அவன் சமாளிக்க வேண்டியதாக இருந்தது. ஆற்று வெள்ளம் அருணாசலத்தின் வயலில் மணலைக் கொண்டு வந்து கொட்டித் தூர்த்து விட்டதால் இரண்டு வருஷம் சரியான விளைவு இல்லை. தவிர நிலத்தைச் சீர்திருத்துவதில் பண கஷ்டம் வேறு ஏற்பட்டு விட்டது. அது மட்டுமல்ல. அவனுடைய தாயும் தகப்பனும் ஒரே வருடத்தில் இறந்து விட்டதால் ஏற்பட்ட கடன் தொல்லை வேறு. புருஷனும் மனைவியும் மாத்திரமே புள்ள சிறு குடித்தனமானாலும், அவர்களால் இந்தக் கடன் தொல்லையைச் சமாளிப்பது கஷ்டமாகத்தான் இருந்தது. ஞானம் தன் புருஷனின் முகத்தைப் பார்த்து அவனுடைய கஷ்டத்தை உணர்ந்து முகம் கோணாமல் தான் அணிந்து கொண்டிருந்த நகைகளை ஒவ்வொன்றாகக் கழற்றிக் கொடுத்து வந்தாள். அவன் தன் மனதிற்குள் குடும்பத்திற்கு ஏற்பட்ட கஷ்டங்களை எண்ணிப் பொருமிப் போவான். அவளுக்கு ஆபரணங்களின் மீது இருந்த ஆசை விடவே இல்லை. அவளுடைய மனதைக் குத்திக் கிளறுவதுபோலக் கோவிந்தனின் மனைவி கனகம் தினம் ஒரு புதுப்புடவை கட்டி விதவிதமான ஆபரணங்களை அணிந்து ஆற்றங்கரைக்குப் பெருமையாக நடந்து வருவது அவளை ஏளனம் செய்வது போலிருக்கும்.

உலையில் சோறு கொதித்துக் கொண்டிருந்தது. அவள் ஏதேதோ யோசனையிலிருந்தாள். அப்போது "ஞானம்" என்ற குரல் வாசலில் கேட்டது.

அப்பொழுதுதான் ஞானத்திற்கு சுய உணர்வு வந்தது. சட்டென்று எழுந்து வெளியே வந்தாள். வாடியிருந்த அவளுடைய முகத்தைக் கண்டதும் அருணாசலம் திடுக்கிட்டு விட்டான். அவன் ஒருவிதமாகச் சமாளித்துக் கொண்டு விளையாட்டுப் போக்கிலேயே "என்ன ஞானம், ஒருவிதமாக இருக்கிறாயே! ஏதாவது கவலையா? நகை நட்டு இல்லையென்று வருத்தமா?" என்று கேட்டான்.

இதைக் கேட்டதும் ஞானத்திற்கு ஆத்திரமும் கோபமும் பொங்கி வந்தது.

"எனக்கு நகை இல்லை, சேலை இல்லை என்று இப்போது நான் அழுதுகொண்டு நிற்கவில்லை. அதோ அந்த உழவு மாடுகளைக் கொஞ்சம் கண்ணை விழித்துப்

பாருங்க. ஒன்னை யொன்னு பார்த்து, 'நீ இன்னிக்குச் செத்துப்போ; நான் நாளைக்குச் சாகிறேன்' என்று சொல்லுவது போலஇருக்கு......"

அருணாசலம் உழவு மாடுகளை ஒரு தடவை பார்த்துவிட்டுச் சிரித்துக் கொண்டே, "போக வைத்தியம், அந்த மாடுகளா இப்போது சாகும்? அதைப் பற்றி நீ கவலைப்படாதே. இதை வைத்துக் கொண்டே நான் இன்னும் நாலு வருஷத்து வெள்ளாமையைச் சமாளிப்பேன். அதுவும் இந்த வருஷம் மாத்திரம் சரியான விளைச்சல் இருந்தானுல் அடுத்த வருஷம் பார்த்துக்கோ, சிவன்கோயில் வெள்ளி ரிஷபம் மாதிரி ஒரு ஜோடி மாடு வாங்கி வீட்டு வாசலிலே கட்டுகிறேன்."



"நீங்க சமத்தாத்தான் எல்லாம் பேசுவீங்க. மூணு காணி நிலத்தை உழுது பயிரிட்டு, வயிர்றைக் கட்டி, விதை எருவெல்லாம் வாங்கி, உழவு மாடு வாங்கி எனக்குச் சேலை நகையெல்லாம் வாங்கி உன்ன கடனையும் அடைச்ச பிறகு சிவன் கோவில் வெள்ளி ரிஷபம் மாதிரி ஒரு ஜோடி மாடு வாங்கிக் கட்டுவீங்க! இந்த மூணு காணி நிலத்தை நம்பியே கோழிக் கனாக் கண்டு கொண்டிருந்தால் எல்லாக் கதையும் நல்லா நடந்துடும்!" என்று பெருமூச்சுடன் சொல்லி நிறுத்தி விட்டுத் துக்கம் தாங்காது கன்னத்தில் கையை ஊன்றிக் கொண்டாள் ஞானம்.

அவ்வளவு நேரமும் விளையாட்டும் சிரிப்புமாகப் பேசிக் கொண்டிருந்த அருணாசலம் இப்போது கொஞ்சம் விஷயத்தை உணர்ந்து பேச ஆரம்பித்தான்: "இந்த மூணு காணி நிலத்தை நம்பித்தான் எங்கள் பாட்டனும் முப்பாட்டனும் பிழைத்து வந்தாங்க. அதை நம்பித்தானே நாமும் பிழைக்கணும்?"

"அந்தக் காலத்திலே அவர்கள் சுகமாக ஜீவித்திருக்கலாம். இப்போது நாம் அந்த மாதிரி இருக்க முடியுமா? அந்தக் காலம் போலவா இப்போ......?"

ஞானத்துக்குப் பதில் சொல்ல அருணாசலம் கொஞ்சம் யோசிக்கத்தான் வேண்டியிருந்தது. "அப்படியானுல் என்ன செய்ய முடியும்? எங்கே யாசகம் போய்க் கொள்ளையடித்துக் கொண்டு தான் வரணும்" என்றான்.

பிறகு சற்று நேரம் யோசித்துவிட்டு "இதோ பார். ஞானம்! உழைச்சு சம்பாதிச்ச காசு தான் காசு. அதை வைத்துக் கொண்டு மன நிம்மதியாயும் மானமாகவும் வாழலாம். ஓட்டைக்குடிசையிலேயே குடியிருப்போம். ஒரு காணி நிலமானாலும், உழுது பயிரிட்டுக் கஷ்ட நஷ்டப்பட்டாலும், சந்தோஷமாகக் குடித்தனம் நடத்துவோம்" என்றான்.

அருணாசலத்தின் வார்த்தை ஒவ்வொன்றும் ஞானத்துக்கு நியாயமானதாகவேபட்டது. அவளுடைய மனம் சிறிது ஆறுதலடைந்தது. இந்தக் கஷ்டத்தை நீக்கக் கடவுள் ஏதேனும் ஒரு வழி காட்டுவார் என்ற நம்பிக்கை அவளுக்கு ஏற்படவே அவளது முகத்தில் ஒரு மலர்ச்சி தோன்றியது.

## 3

ஒரு நாள் அருணாசலம் வீட்டுக்குள் நுழையும் போதே "ஞானம், எங்க மாமா வந்திருக்கிறார்" என்று சொல்லிக் கொண்டே நுழைந்தான். ஏதோ வீட்டு வேலையில் கவனமாயிருந்த ஞானம் "மாமாவா? யாரது?" என்று கேட்டுக் கொண்டே வெளியே வந்தாள். அருணாசலத்தோடு சட்டையும் குல்லாயுமாய் ஒரு வயதான மனிதர் நிற்பதைக் கண்டு அவள் வெட்கமடைந்து வாசற்படிக்குப் பின்புறமாகக் கதவோடு ஒட்டி நின்றாள்.

அந்த மனிதர் மெதுவாக ஒரு தடவை கனைத்துக் கொண்டு "இது உன் மனைவியா? ஏதோ குடித்தனத்துக்கு அடங்கின பெண்ணாய் இருந்தால் சரிதான். உனக்கு ஒரு குழந்தையில்லே யென்னுதான் எனக்குக் கொஞ்சம் வருத்தமா யிருக்குது" என்று சொல்லிவிட்டு வீட்டைச் சுற்றிலும் ஒரு தடவை பார்த்தார். அவருக்கு வயது அறுபதுக்கு மேலிருக்கும். முகத்தில் அடர்த்தியாயிருந்த மீசையில் பாதி பாகம் நரைத்திருந்தது. நெற்றியில் காலணா அகலம் சந்தனப் பொட்டு. ஜரிகை வைத்துத் தைத்த சிகப்புப் பட்டுக் குல்லாய். வெள்ளையில் பச்சைக் கோடிட்ட நீண்ட சட்டை.

அன்று மத்தியானம் சாப்பாட்டுக்கும் பிறகுதான் தன் வீட்டுக்கு வந்தவன

மனிதர் யாரென்று ஞானம் சரியாகத் தெரிந்து கொண்டாள்.

முருகேசப் படையாச்சி அருணாசலத்தின் சொந்த மாமன். அருணாசலம் பிறந்த வருஷத்திலேயே ரங்கூனுக்குப் போனவர். இப்பொழுதுதான் திரும்பி வந்திருந்தார். அருணாசலம் தனக்கு ஒரு மாமன் இருந்து ரங்கூனுக்குப் போனதாகத் தன் தாயார் சொல்லக் கேட்டிருக்கிறானே தவிர, அவர் எப்படி இருப்பார், அவர் உயிரோடு இருக்கிறாரா என்பதைப் பற்றிக் கவலைப்பட்டதே கிடையாது. முருகேசப் படையாச்சி முப்பது வருஷங்களுக்கு மேலாகவே ரங்கூனிலிருந்துவிட்டு இரண்டாவது உலக யுத்தத்துக்கு முஸ்தீப்பு நடந்து கொண்டிருக்கும் தறுவாயில் சொந்த ஊருக்குத் திரும்பினார். முருகேசப் படையாச்சி ரங்கூனில் தோட்ட மேஸ்திரியாய் இருக்கும்பொழுது யாரோ ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டாராம். கல்யாணம் செய்துகொண்ட இரண்டு வருடங்களுக்குள் அவள் இறந்து விடவே, வேறு கல்யாணமே செய்து கொள்ளாமல் இருந்து விட்டாராம். அவருக்கு நெருங்கிய உறவினன் அருணாசலத்தைத் தவிர வேறு யாருமே கிடையாது. அவர் ரங்கூனிலிருந்து ஏராளமான பணத்துடன் வந்திருப்பதாயும் அதற்கு அருணாசலமே பாத்யதையுடையவனென்றும் ஊரில் எல்லோரும் சொல்லிக் கொண்டார்கள். ஆனால் அருணாசலம் அதைப் பற்றி யெல்லாம் கவலைப் படவேயில்லை. ஆனால், ஞானம் ஏதேதோ மனக் கோட்டைகளெல்லாம் கட்ட ஆரம்பித்தாள்.

ஒருநாள் பகல் சாப்பாட்டுக்குப் பின் அருணாசலமும் அவனுடைய மாமாவும் ஊர்க் கதைகளை யெல்லாம் சாவகாசமாகப் பேசிக் கொண்டிருந்தனர். ஞானம் சமையலறையில் உட்கார்ந்தபடியே அவர்களுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

புதுப்பண்ணை கோவிந்தனுக்குச் சொத்து வந்த விதம் பற்றியும், அவன் இப்பொழுது இருக்கும் நிலைமையைப் பற்றியும் அருணாசலம் சொன்னான். அவனுடைய மாமா அதற்குச் சொல்லிய பதில்தான் ஞானத்துக்குத் 'திக்'கென்றது. அவர் கலகலவென்று ஒரு தடவை சிரித்துவிட்டு "தம்பி ஒரு உண்மையைக் கேட்டுக்கொள். எப்போதும் உழைக்கச் சம்பாதித்த பணம்தான் நிலைச்சு நிற்கும். ஓசியாக இருந்தவனுக்குத் திடீரென்று பணம் வந்தால் நிலைகால் தெரியாமல்தான் நடப்பான். கோவிந்தனுடைய சித்தப்பன் ஒரு முட்டாளாய்த்தா னிருக்கணும். தான் சம்பாதித்த காசைத் தானே அனுபவிக்க அவனுக்குக் கொடுத்து வைக்கவில்லை. அப்படி அனுபவிக்கத் தெரியாவிட்டால் அந்தப் பணத்தை நல்ல தான தருமமாவது செய்திருந்தால் அவன் பெயரையாவது நாலு பேர் சொல்லிக் கொண்டிருப்பார்கள். நானாக இருந்தால் அப்படித்தான் செய்வேன்" என்றார்.

சமையலறை வாசற்படியிலிருந்து இதைக் கேட்டுக் கொண்டிருந்த ஞானத்திற்கு 'பகீ'ரென்றது.

அருணாசலத்தின் மாமா ரங்கூனிலிருந்து வந்த நான்கைந்து நாட்களுக்குப் பிறகு தாம் இந்தியா வெங்கும் சுற்றி க்ஷேத்திராடனம் செய்துவிட்டு வருவதாகச் சொல்லிக் கிளம்பிவிட்டார். பெட்டி படுக்கைகளுடன் போகும்போது ஞானத்தை வெகு அன்பாகக் கூப்பிட்டு ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்து அவளுக்கு வேண்டிய சேலை ரவிக்கை ஏதாவது வாங்கிக் கொள்ளும்படி சொன்னார். அதை வாங்கிக் கொள்ளும்போது ஞானத்தின் முகத்தில் அளவற்ற ஏமாற்றம்தான் பிரதிபலித்தது.

4

இரண்டு வருஷங்கள் ஓடிவிட்டன. அருணாசலத்தின் வீடு புதுப்பிக்கப்படவில்லை. மேற்புறம் பூராவும் இடிந்து விழுந்து விட்டது. கீழ்ப் பகுதி எந்த மழைக்கு விழுவோம் என்று காத்திருந்தது.

இந்த இரண்டு வருட ஓட்டத்தில் ஊரில் புதுப் பண்ணை கோவிந்தனின் நிலைமை மிகவும் மோசமாகியது. பெரிய பண்ணை



மூப்பனருக்கு எதிராக ஒவ்வொரு காரியத்திலும் போட்டியிட்டு மிகவும் கஷ்டமடைந்தான். மறு வருடத்திலிருந்து அந்த ஜில்லாவில் மதுவிலக்கு ஏற்படும் என்று எல்லோருக்கும் தோன்றியதால் அந்த வருடம் கள்ளுக்கடை ஏலம் மிகவும் கடுமையாகவே இருந்தது. இந்தக் கடைசி வருஷத்திலாவது மூப்பனருடன் போட்டியிட்டு அந்த வட்டாரத்துக் கள்ளுக்கடைகளைத் தான் ஏலத்தில் எடுத்துவிட எண்ணினான். மூப்பனர் ஏலத் தொகையை மிகவும் தூக்கிவிட்டதால் கோவிந்தன் அவைகளை ஏலத்தில் எடுத்து ஏராளமான நஷ்டமடையும்படி நேர்ந்தது. அவனுடைய சொத்தில் பெரும் பாகமும் மனைவி அணிந்திருந்த ஆபரணங்களும் போய்விட்டன.

ஜெயில் யாத்திரை போயிருந்த அருணாசலத்தின் மாமா முருகேசப் படையாச்சி திரும்பி வந்து ஊரிலுள்ளவர்களுக்கெல்லாம் ஒரு பெரிய விருந்து நடத்தினார். தாராளமான மனப்பான்மையுடனும் உலகில் இனி தனக்கு எவ்விதப் பற்றுதலும் இல்லாதது போலவும் அவர் பேசியது ஞானத்துக்கு ஒரு அசட்டு நம்பிக்கையைக் கொடுத்தது. ஆனால் ஒவ்வொரு க்ஷேத்திரத்திலும் அவர் செய்த தாராளமான தானதர்மங்களைப் பிறரிடம் சொல்லியபொழுது, அவளுக்குப் 'பகீ' ரென்றது. இவ்வளவு பணச்செலவு செய்த பிறகு அவரிடம் என்ன இருக்கப் போகிறது?

முருகேசப் படையாச்சி திடீரென்று ஒரு நாள் நிம்மதியாக உயிர் துறந்தார். அருணாசலம் தன் மாமாவுக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களையெல்லாம் செய்து முடித்தான்.

ஞானத்துக்கு கவனமெல்லாம் பணப் பையில்தான் இருந்தது. அவள் அந்தப் பையைக் கொண்டு வந்து தன் கணவன் முன் வைத்து, "அவர் இறந்த பிறகு நீங்கள் இந்தப் பையையே மறந்து விட்டீர்களே; நான் பத்திரமாக எடுத்து வைக்காவிட்டால் என்ன ஆகும்?" என்றாள்.

"எடுத்து வைத்ததால்தான் என்ன ஆய்விடப் போகிறது? இதெல்லாம் மனிதனுக்கு நிலையா? மனிதனுக்குப் பணந்தான் நிலை என்றால், இவர் இப்படி தானதர்மமெல்லாம் செய்வாரா?" என்று பற்றற்றும் பேசினான் அருணாசலம்.

"நீங்கள் சொல்லுவது சரி. ஆனால் அவர் இப்போது வைத்துவிட்டுப் போயிருக்கும் பணத்தை என்ன செய்யப் போறீங்க?" என்றாள் பையிலுள்ள காடாவின் முடிச்சை அவிழ்த்துக் கொண்டே.

"அப்படி என்ன பிரமாதமாக வைத்திருக்கப் போகிறார்? முதலிலே அதைப் பிரித்து எண்ணு பார்ப்போம்" என்றான் அருணாசலம்.

ஞானம் பையைப் பிரித்துத் தரையில் கொட்டி எண்ணத் தொடங்கினாள்.

"எவ்வளவு இருக்கிறது?" என்றான் அருணாசலம்.

"சரியாக ஆயிரத்து அஞ்சு ரூபாயும் ஒரு காலணாத் துட்டும் இருக்குது" என்றாள் ஞானம்.

அருணாசலம் இதைக் கேட்டு ஆச்சரியமடைந்தான். "ஆயிரம் ரூபாய் சொச்சமா? ஏன இவ்வளவு ரூபாய் மிச்சம் வைத்திருக்கிறார்? சரி, இது அவருடைய கருமாதிச் செலவுக்குப் போதாதா?" என்றான்.

ஞானத்துக்கு மண்டையில் அடித்தது போல் இருந்தது.

"ஏன்? அவர் பதினாயிர ரூபாய் வைத்து விட்டுப் போயிருந்தாலும் அதையும் கருமாதிக்காகத்தான் செலவழிப்பீர்களோ?" என்றாள்.

"சரி, அப்படியானால் அந்தப் பணத்தை வைத்து என்ன செய்வது?"

"என்ன செய்யலாம்; நீங்கள்தான் சொல்லுங்களேன்!"

அருணாசலம் சிறிது நேரம் யோசனை செய்துவிட்டு ஒரு முடிவுக்கு வந்தவன் போல் "கருமாதி செய்த பிறகு மிஞ்சும் பாக்கிப் பணத்திலே உனக்கு வேண்டிய நகையோ சேலையோ வாங்கிக் கொள்" என்றான்.

ஞானம் அருணாசலத்தின் முகத்தைக் கூர்ந்து நோக்கினாள். அந்தச் சூதுவாதற்ற முகத்திலே எந்த உணர்ச்சியையும் அவளால் கண்டு பிடிக்க முடியவில்லை.

"எனக்கு இனிமேல் இந்த நகையிலும் சேலையிலும் ஆசை இல்லை. முதலிலே வீட்டைப் பழுது பாருங்க. நாம் இரண்டு பேர் மாத்திரம் இருந்தால் எப்படியோ பல்லைக் கடித்துக் கொண்டு இந்த வீட்டிலேயே இருந்துவிடலாம்" என்றாள்.

"நம் இரண்டு பேரைத் தவிர இந்த வீட்டுக்கு வேறு யார் வரப்போகிறார்கள்?" என்றான் அருணாசலம் அதிசயத்தோடு ஞானத்தைப் பார்த்தபடியே.

உடலை சற்றுத் தலை குனிந்தபடி "நான் இக் குழந்தையை வைத்துக்கொண்டு இந்த இடிஞ்ச வீட்டிலே இருக்க முடியுமா?" என்றான் ஏதோ புதிரின் புதை பொருளை உடைத்துச் சொல்லுகிறவன்போல.

அருணாசலம் இதைக் கேட்டு அப்படியே திகைத்துப் போய்விட்டான். அவன் ஞானத்தின் முகத்தை உற்று நோக்கி ஏதோ உண்மையைத் தெரிந்துகொண்டவன்போல் சந்தோஷத்துடன் பெருமூச்சு விட்டான்.

5

ஆற்றங்கரையில் செங்கமலம் பானையைக் கழுவித் தண்ணீர் எடுத்துக்கொண்டிருந்தாள். புதுப்பண்ணை கோவிந்தனின் மனைவி கனகம் தனனுடைய கஷ்டத்தையும் துயரத்தையும் ஒருவிதமாக அவளிடம் சொல்லி விட்டு மன ஆறுதல் அடைந்தவள் போல் கரையேறினாள். ஞானம் அப்பொழுதுதான் அவள் எதிரில் ஆற்றுக்கு நீரெடுக்க வந்தாள்.

கனகத்தின் தலை மறைந்ததும், செங்கமலம் பானையில் தண்ணீரை நிரப்பிக் கரையில் வைத்துவிட்டு "பார்த்தாயா ஞானம், கனகத்துக்கு வந்த வாழ்வை! மூணே முக்கால் நாழி முத்து மழை பெய்தாப்போலே இருக்குது. போன வருஷமெல்லாம் பட்டுச் சேலையும் நகையுமாகக் குலுக்கினாள், மினுக்கினாள். இப்போது பார்! பணம் என்றாலே தப்படித்தான்" என்றாள் அனுதாபம் தொனிக்க.

ஞானத்திற்கும், கனகத்துக்கு ஏற்பட்ட கதி மிகவும் அனுதாபத்தைத்தான் உண்டாக்கியது, "ஆமாம் அக்கா, பணம் பாஷாணம் என்று சொல்லுவது சரியாய்த்தானிருக்குது. திடீரென்று மாய வேலை செய்வதைப் போலப் பணம் வந்து ஒரு கூத்து அடித்து விட்டுப் போவதைவிட அந்தப் பணம் வராமலேயே நாம் எப்போதும்போலக் கஷ்டமோ சுகமோ அனுபவித்துக் கொண்டிருப்பது எத்தனையோ தேவலை" என்றாள் ஒரு பெருமூச்சுடன்.




மூர்மார்க்கட்டின் பெயரை 'அசோகா மார்க்கட்' என மாற்ற வேண்டும் என மூர்மார்க்கட் வியாபாரிகள் சங்கத்தின் கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. —சென்னைச் செய்தி.

இது விஷயத்தில் ஒரு வியாபாரியும் மூர்க்கத்தனமாக மாற்ற வேண்டாம் என்று கூறியிருக்க மாட்டார்.

★

வெடி மருந்துக் கிடங்கில் தீ விபத்து. நெருப்புப் பிடித்துக் கொண்ட காரணம் பற்றி விசாரித்துக் கொண்டிருக்கின்றனர். —செய்தித் தலைப்புகள்.

காரணத்தைப் பற்றி விசாரிக்கிறீர்களா? நல்ல பிருகஸ்பதிகள்!

★

சர்ச்சில் வீட்டுக்கு அருகில் தீ. —செய்தித் தலைப்பு.

தீயின் காரணத்தைப் பற்றிப் போலீசார் புலன் விசாரிக்க வேண்டிய அவசியம் கொஞ்சங்கூட இல்லை!

பீகிங் பேட்டையில் கொள்ளைக்காரர்கள் முக மூடியுடன் வந்து கொள்ளை அடித்தனர். —செய்தித் தலைப்புகள்

நியாயம்தானே! பீகிங்கில் இருக்கும் இடத்தில் கொள்ளைக்காரர்கள் முக மூடியுடன் வந்ததில் என்ன தவறு?

★

ஜெயிலில் கம்பிகளை நீக்கி நான்கு கைதிகள் தப்பி ஓடி விட்டனர். —திருவனந்தபுரச் செய்தி.

கம்பிகளை நீக்கிக் 'கம்பி' நீட்டி விட்டனர் போலும்!

★

இரு திருடர்கள் ஷெட்டிலிருந்த டிராம் வண்டியை இரவில் வெளியே உல்லாசப் பிரயாணம் செய்ய எடுத்துச் சென்று விட்டனர். —சிட்னி செய்தி.

'டிராம் வண்டி போட்ட சத்தத்தைக் கேட்டு ஒருவருமா எழுந்திருக்கவில்லை?' என்று கேட்கிறார் ஒரு சென்னைவாசி.



# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 215. காதில் விழுமா அந்த வில்லொலி!

அசோக வனத்திலிருந்த சீதையிடம் ராவணன் வந்தான். அவள் காலில் விழுந்தான். தான் படும் வேதனையிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்றே சொன்னான். இந்த வார்த்தைகள் சீதையின் இதயத்தில் ஏதோ ஒரு மூலையில் பதுங்கிக் கொண்டிருந்த கோபத்தை, கோபாக்கினியாக வெளி வந்து வெறியாட்டம் ஆடும்படிச் செய்தன.

கடைசியில் தர்ம நெறி இப்படி யென்று சீதை சொல்லிக் காட்டினாள். ராவணனுக்குக் கோபவெறி மூண்டு விட்டது. பைத்தியம் பிடித்தவன் போல் ஆகிவிட்டான். வார்த்தை பேச முடியவில்லை. அப்படியே அரண்மனையை நோக்கிப் போய் விட்டான்.

அசோகவனத்தில் நிசப்தம் உண்டாய்விட்டது.

இத்தனை நிகழ்ச்சிகளையும் ஒரு உச்சிக் கிளையிலிருந்து பார்த்துக் கொண்டிருந்தான் அனுமன்.

நேரம் நடுநிசி.

'சீதையைக் கண்டு பேசுவதற்கு இதுதான் சரியான சமயம். யாரும் விழித்திருக்கக் காரணம் இல்லை' என்று எண்ணுகிறான்.

காண்டற்கு ஒத்த
காலமும் ஈதே:

அடுத்தாற்போல் கொஞ்சம் கீழாயுள்ள கிளையில் இறங்கிப் பார்த்ததும் கண்ணுக்கு என்ன தெரிகிறது: ஒரே விழிப்பாய் சீதையைச் சுற்றி வட்டமிட்டுப் பல அரக்கிகள் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. அவர்களுடைய முகத்திலும் கண்களிலும் சோர்வு என்பது கொஞ்சமுமில்லை. அவர்களுடைய ஜாக்கிரதையைப் பார்த்தால் காவலுக்கு அதிதேவதையான காவல் தெய்வத்துக்குத் தூக்கம் வரும் என்று வைத்துக் கொண்டால் அந்த தெய்வத்தையே (தெறுகாவல்) ஒரு அடி அடித்து 'என்ன தூக்கம்!' என்று தூண்டக் கூடும்! — அவர்களுடைய விழிப்பு அப்படி இருந்தது!

அநுமனுக்கு மனம் இடிந்து விட்டதென்றால் குற்றமில்லை.

தெறுகா வல்
தூண்டற் கொத்த
சிந்தையி னாரோ
துயில்கில் லார்

ஆனாலும் அநுமனுக்கு அந்தத் தருணத்தில் தன்னுடைய மந்திர சக்தி நினைவுக்கு வந்தது. உடனே சிரிப்பே வந்து விட்டது. "அப்படியா, கெஞ்சிக் கேட்டால் தூங்கவா செய்வார்கள்' என்று ஒரு மந்திர வித்தை செய்ய ஆரம்பித்தான்.

வேண்டத் துஞ்சார்,
என்றொரு விஞ்சை
வினைசெய் தான்

இப்பொழுது முழுப் பாட்டைப் பார்க்கலாம்.

காண்டற் கொத்த
காலமும் ஈதே;—
தெறுகா வல்
தூண்டற் கொத்த
சிந்தையி னாரோ
துயில்கில் லார்:

வேண்டத் துஞ்சார்,
என்றொரு விஞ்சை
வினைசெய் தான் ;—
மாண்டற் குற்று
ராமனை எல்லாம்
மயர்வுற் றார்.

[தெறுகாவல் : காளிகோயில் முன்பு வாசலில் இரண்டு பயங்கரமான பெருத்த உருவங்கள் செய்து வைத்திருக்கும், கண்கள் இரண்டும் அரையடி குறுக்களவுள்ள வட்டமாக இருக்கும். பயத்தை உண்டாக்க வேண்டும் அல்லவா? கையில் பெரிய வாள் ஒன்றை ஏந்தி ஓங்கிய வண்ணமாய் இருக்கும். இவைகள் தான் காவலுக்கு அதி தேவதைகளின் சிலை உருவங்கள் மீறிச் செல்பவர்களை வாள் கொண்டு வெட்டி விடும் (தெறும்) என்பது குறிப்பு. அத்தகைய காவல் தெய்வத்தை; தூண்டற் கொத்த சிந்தையினரோ: தூண்டி ஜாக்ரதைப் பண்ணக் கூடிய அரக்கிகளோ; துயில் இல்லார் : தூங்கவே மாட்டார்கள்; வேண்டத் துஞ்சார்: வேண்டிக்கொண்டால் ' தூங்கவா செய்வார்கள் — மாட்டார்கள்; ஏளனமாக என்னும் எண்ணம் இது. விஞ்சை வினை செய்தான்: வித்தைத்தொழில் செய்தான் அனுமன்; மாண்டற்கு உற்றாராம் என : இறந்து போய் விட்டார்களோ என்று எண்ணும்படி, எல்லா அரக்கிகளும் அப்படியே மயக்கத்துக்கு உள்ளாகி விட்டார்கள் —தூங்கியே போனார்கள்.

குறிப்பு :—வாய்ப்பான நேரந்தான் என்று எக்களிப்பு பாவத்தில் ஆரம்பிக்கிறது. அரக்கிகளின் விழிப்பைக் கண்டு ஒரு கையற்ற பாவம் ஏற்படுகிறது. மந்திர சக்தி தன்னிடத்தில் இருக்கிறதே என்ற எண்ணத்தில் எக்களிப்பும் ஹாஸ்யமும் கலந்த பாவம் உண்டாகிறது.

கடைசியில் ஒரு வெற்றியும் தீரமும் கலந்த பாவம். அப்படியே ஒரு நொடியில் தூங்கி விட்டார்கள்.

அநுமனது சிந்தையில் நிகழ்ந்தவற்றை யெல்லாம் வெகு அபூர்வமான பாவங்களில் சித்திரித்திருக்கிறது.

•
• •

சிறையில் பல நாளாக இருந்த காரணத்தால் துயரம், பயம் என்பது சாதாரணமாகச் சீதைக்கு வருவதில்லை. பொல்லாத அரக்கிகள் எத்தனை பேர் சுற்றி யிருந்தாலும் ஆயுதங்களோடிருந்தாலும் பயமுறுத்தின போதிலும் அவைகள் அவளை பாதிப்பதே இல்லை.

ஆனால் அந்தச் சமயத்தில் என்றும் காணாத ஒரு காட்சியைக் கண்டாள் :

சதா விழிப்போடிருக்கும் அரக்கிகள் தூங்கி விழுந்து கிடப்பதைக் கண்டாள். காணாததைக் கண்டவுடன் துயரம் உண்டாய் விட்டது சீதையினுடைய மனசில். எந்த விதத்திலும் இந்த இடத்திலிருந்து தப்ப முடியாதே என்ற துயரம் இதயத்தைத் தாக்குகிறது.

துஞ்சா தாரும்
துஞ்சுதல் கண்டாள்
துயர்ஆற் றாள்.

நெஞ்சால் ஒன்றும்
உய்வழி காணாள்
நெருங்கின் றாள்.

அஞ்சா நின்றாள் ;—
பன்னெடு நாளும்
அழிவுற் றாள்

எஞ்சா வன்பால்
இன்னப கர்ந்(து)ஆங்(கு)
இடருற் றாள்.

[துஞ்சாதாரும் துஞ்சுதல் கண்டாள் : ஒரு நாளும் கண்மூடி தூங்காத அரக்கிகள் தூங்கு



ஜிப்பாக்காரர் :—"உதய சந்திரிகா"வைப் பார்த்தீர்களா, ஸார்?

நண்பர் :— அது என்ன, ஒரு புது தமிழ்ப் பத்திரிகையின் பெயரா? அல்லது சினிமாவா? இல்லை, சமீபத்திலே அரங்கேற்றமான நாட்டிய குமாரிகளில் யாராவதா?

வதைப் பார்த்தான்; அவர் ஆற்றுன்; தாங்க முடியாத அயரம் இடீ என்று வந்து இதயத்தைத் தாக்கியது; நெஞ்சால் ஒன்றும் உய்வழி காணுன்; அரக்கிகள் தூங்குவதும் போதுமா? என்ன யோசனை பண்ணின போதிலும் தப்பிப் போகும் மார்க்கம் இல்லை; தெருகின்றுள்; அப்படியே உள்ளமும் உடலும் கரைந்து போவதாகத் தோன்றுகிறது அவளுக்கு; அஞ்சா நின்றுள்; அஞ்சுகிறுள்—அச்சத்துக்கு உள்ளாய் விட்டாள்; பல் நெடுநாளும் அழிவுற்றுள்; எத்தனையோ நாளாக இதயம் இடிந்து இடிந்து கஷ்டப்பட்டவள்; எஞ்சா வன்பால்; குறையாத கொடுமை காரணமாக; இன்ன பகர்ந்து; கீழே கண்டவாறு புலம்பி, துன்பத்தில் உழன்றுள்.]

துயரம் அளவுக்கு மிஞ்சிப் போய் விடவும் மனமும் பேச்சும் அசாதாரண முறையில் வெளிப்படுகின்றன. வீரத்துக்கு அதி தேவதையான வீரலக்ஷ்மி ஒன்றிருப்பதாகப் பேசுவதையும் எண்ணுவதையும் பார்க்கிறோம். சீதையும் அந்த தேவதையை மனசில் பாவனை பண்ணிப் பார்த்தவள் தான். அந்த தேவதை அடிக்கடி வந்து கண்முன் நிற்பதாகத் தோன்றும் சீதைக்கு.

நீல மேகத்தையும் பரந்த கடலையுமே ஒத்த ராமன் என்னுடைய, இப்போது கரிகிற, என் உயிரைப் பாதுகாத்துக் கொடுப்பானு?

சந்தம்

தான தன
தன்ன தன்ன
தன்

கருமே கநெ—
டுங்கடலே அனை
யான்,

தருமே தனி—
யேனென(து) ஆருயிர்
தான்

உருமே றுறழ்
வெஞ்சிலை நாணொலி
தான்;

வருமோ உரை
யாய்வலி யார்வலி
யே!

[கருமேகம் நெடுங்கடலே அனையவன்: நீல மேகத்தையும் பரந்த கடலையுமே ஒத்த திருமேனியவனுன ராமன்; தருமே தனியேன் எனது ஆருயிர்தான்: தனியாகவே இருக்கிற என்னுடைய ஆருயிரைத் தந்தான் செல்வானு; தருமோ; தருமோ; உரும் ஏறு உறழ்; பேரிடியை ஒத்த; வெஞ்சிலை நாணொலி தான் வருமோ: அந்த வீர வில்லின் நாணொலி தான் வந்து இந்த ஜனமத்தில் என் காதில் வி[ழுமா]; உரையாய்: சொல்ல மாட்டாயா; வ[லியார்] வலியே: வீரர்களுக்கு சக்தியைக் கொ[டுக்]கிற வீர தேவதையே (வீரலக்ஷ்மியே.)]

வீர தேவதை என்று ஒன்று இருப்பதாகவும், அந்த தேவதையே வீரர்களை வீரச் செயலுக்குத் தூண்டி வெற்றியைக் கொடுப்பதாகவும் அல்லவா படுகிறது சீதையின் உள்ளத்துக்கு. அந்த உணர்ச்சி வேகம் ஒரு அற்புதமான நாடக இயலில் பேசுகிறது. "பேரிடியை ஒத்த அந்த ராமபிரானது வில்லின் ஒலி இந்த என் காதில் விழுமா? வீர லக்ஷ்மியே வாய் விட்டுச் சொல்லேன்!"

"சீதையின் துயரம் இப்படியிருக்கிறது பாருங்கள்" என்று நமக்குக் காட்டுகிறார் கவிஞர்.

* * * * * * * * * * *

## வெற்றி நிச்சயம்!

இந்தியாவின்மீது படை யெடுத்து வந்த மொகலாய அரசர்களில் அஹமது ஷா அப்தாலியும் ஒருவன்.

பானிப்பட்டிலே அஹமது ஷா அப்தாலியின் படைக்கும் இந்திய சைனியத்துக்கும் கடும் போர் மூண்டது. ஒரு நாள் அஹமது ஷா அப்தாலி பாசறையை விட்டு வெளியே வந்து உலாவிக் கொண்டிருந்தபோது, வெகு தூரத்துக் கப்பால் ஆங்காங்கே பல இடங்களில் சிறு நெருப்பு ஜ்வாலைகளைக் கண்டான். உடனே தன் பக்கத்தில் இருந்த மந்திரியை நோக்கி, "மந்திரீ, அது என்ன? உமக்குத் தெரியுமா?" என்று கேட்டான்.

"அதுவா? இந்திய சைனியம் சமையல் செய்து கொண்டிருக்கிறது. இந்தியர்களில் ஜாதி பேதம் நிறைய உண்டு. அவர்களில் ஒருவர் சமைத்ததை மற்றொருவர் சாப்பிட மாட்டார்கள்" என்றார் மந்திரி.

இதைக் கேட்டதும் அஹமது ஷா அப்தாலிக்கு அளவுகடந்த சந்தோஷம் உண்டாயிற்று.

"அப்படியா! இனி நமக்கு வெற்றியைப் பற்றிக் கவலையே இல்லை" என்றான்.

* * * * * * * * * * *



# வளரும் தமிழ்

## பிற நாடுகளில் ஸ்தல ஸ்தாபனங்கள்

“ஜனநாயகம் என்றால் என்ன?” என்று பள்ளிக்கூடத்தில் படிக்கும் ஒரு மாணவனைக் கேட்டால் கூட, அவன் ‘டக்’கென்று, “ஏன், நம்முடைய பிரசித்தி பெற்ற ஜில்லா போர்டுகளும், முனிசிபாலிட்டிகளும்தான், ஸார்!” என்று பதில் சொல்லுவான்.

மேல் நாடுகளில் உள்ள ஸ்தல ஸ்தாபனங்களுடன் நம்முடைய ஸ்தல ஸ்தாபனங்களை ஒப்பிட்டுப் பார்த்தால் ‘அடேயப்பா, எவ்வளவு வித்தியாசம்! ஜனங்களுடைய சுகத்தில் அவைகள் எவ்வளவு சிரத்தை கொண்டிருக்கின்றன! ஜனப் பிரதிநிதிகளென்று சொல்லிக் கொண்டு, மேற்படி ஸ்தல ஸ்தாபனங்களுக்குள்ளே போகிறவர்கள் எவ்வளவு திறமையாகவும் சிறப்பாகவும் மேற்படி ஸ்தாபனங்களை நிர்வகிக்கிறார்கள்’ என்று எண்ணத் தோன்றுகிறது.

“தினமணி” ஆசிரியர் ஸ்ரீ ஏ. என். சிவராமன் அவர்கள் தாம் எழுதிய “பிற நாடுகளில் ஸ்தல ஸ்தாபனங்கள்” என்ற புத்தகத்தில் மேற்படி விஷயத்தைப் பற்றி ரொம்பத் தெளிவாக எழுதியிருக்கிறார். இத்தகைய கஷ்டமானதும் சிக்கலானதுமான விஷயத்தைப் பற்றி இவ்வளவு தெளிவாக எழுதுவதற்கு ஸ்ரீ சிவராமன் ஒருவரால்தான் முடியும். யாரோ ஆங்கிலத்தில் எழுதிய புத்தகத்தைப் படித்து விட்டு ஸ்ரீ சிவராமன் இந்த நூலை எழுதவில்லை. தாமே அமெரிக்காவுக்குப் போய், பல ஸ்தல ஸ்தாபனங்களையும் அவைகள் செய்யும் வேலையையும் நேரில் பார்த்துவிட்டு வந்து இந்தப் புத்தகத்தை எழுதியிருக்கிறார்.

ஜில்லா போர்டுகளை ஒழித்து விடுவதா, கிராமப் பஞ்சாயத்து சபைகளை ஏற்படுத்துவதா என்பதைப் பற்றிச் சென்னை சர்க்கார் தீவிரமாக ஆலோசித்துக் கொண்டிருக்கும் இந்தச் சமயத்தில் குமரி மலர் காரியாலயத்தார் இந்தப் புத்தகத்தைக் கொண்டு வந்தது மிகவும் பாராட்டத்தக்கது. நம்முடைய நாட்டில் ஸ்தல ஸ்தாபன சுயாட்சி உண்மையாகவே வெற்றி யடைய வேண்டுமானால், அதற்கு என்னென்ன செய்ய வேண்டுமென்பதைப் பற்றி ஸ்ரீ சிவராமன் கூறும் யோசனைகள் மிக்க உதவியாக இருக்கும். விலை ரூ 2-8-0.

## யுவதி

தமிழ்ச் சுடர் நிலையம் பிரசுரித்துள்ள பல நாவல்களுள் “ஆர்வி” எழுதிய யுவதியும் ஒன்று.

மிராசுதார் ராம சேஷய்யரின் மகன் சுந்தரம், பண்ணையாள் கண்ணப்பன் மகள் காவேரியிடம் இனந் தெரியாத அன்பு பாராட்டுகிறான். காவேரியின் இளமை எழில் வளர்ச்சி யடைய அடைய சுந்தரம் அவள்மேல் கொண்ட அன்பும் வளருகிறது. சிறுமி காவேரி யுவதியாக மாறுகிறாள். சுந்தரம் அவள்மேல் கொண்ட இனந் தெரியாத அன்பும் காதலாக மாறிவிடுகிறது.

இந்தச் சுந்தரம்-காவேரி அன்பு பிரமாதமான வேலைகளைச் செய்கிறது. தாய்க்கும் மகனுக்கும் மனஸ்தாபம். புருஷனுக்கும் மனைவிக்கும் மனஸ்தாபம். சுந்தரத்துக்கும் அவன் நண்பனுக்கும் மனஸ்தாபம். காவேரியின் பெற்றோர் அவளைக் கைவிடுகின்றனர். தலை தெறிக்கும் வேகத்தில் சென்று கொண்டிருக்கும் இந்தப் போராட்டத்துக்குக் காவேரி முற்றுப்புள்ளி வைக்கிறாள்; சுந்தரத்தை விட்டுப் பிரிந்து தனி வழி செல்லுகிறாள். விலை: ரூ. 5—8—0




தந்தை (பரீட்சை முடிவுகளைப் பார்த்து விட்டு) பேஷ்! இப்போது என் மகனுக்கு இரண்டாயிரம் ரூபாய் அதிகமாக வரதட்சிணை கிடைக்கும்!

நீங்கள் கையாளும்
ரூபாய் நோட்டுக்களிலிருக்கும்
அழுக்கினாலும் கிருமிகளாலும்
அபாயம் ஏற்படும்!




லைப்பாய் சோப்பினால் அடிக்கடி
சுத்தம் செய்துகொள்ளுங்கள்!

# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களைக் காப்பாற்றுகிறது

L. 97-111 TM

# நீங்கள் கவனிக்க வேண்டியது!



குணம் நிறைந்த
கோகுல் சந்தன்
தைலம்

கூந்தலுக்குச் சிறந்த மண
மும் மிருது வைப்பும்
நிறைந்த வளர்ச்சியும் தந்
திறது. ஆயிரக்கணக்கான
மக்கள் அதையே உப
யோகிப்பதன்
உண்மையும்
அதுவே






கோகுல் டிரேட் மார்க்
கவனித்து
வாங்குங்கள்

## டி. எஸ். ஆர். & கோ
## கும்பகோணம்

மதராஸ் ஏஜண்டு:

**புஷ்பவனம் ஸ்டோர்ஸ்**

பைகிராப்ட்ஸ் ரோடு

திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி ஜில்லாக்கள்
வி பாலக்காடுக்கு ஏஜண்டு:

**B. பாலபட்டாபி**

வைசியாள் தெரு, கோயமுத்தூர்



### குலதனம்

போலக் கேச தனமும், சில குடும்பங்களில் பரம்பரையாக வருவதுண்டு. கேச தனம் படைத்தவர், அது நஷ்டமாகாமல் கேசவர்த்தினியைக் கொண்டு காப்பாற்றுங்கள். படைக்காதவர் கேசவர்த்தினியைக் கொண்டு அதை அடையுங்கள். சிறு வயது முதல் கேசவர்த்தினி ஒன்றையே உபயோகித்து வருவதால், இள நரை வழுக்கைகளைத் தடுத்துக் கேச ஆரோக்கியத்தையும் கேச சம்பத்தையும் தவறாமல் பெறுங்கள்.

மெலிந்து இளைத்த சிறுவனும் தேகப்பயிற்சி ஆகாரங்களால் பருத்து அழகிய சதைக் கட்டைப் பெறுவது போல, அற்ப கூந்தல் படைத்தவரும் கேசவர்த்தினியைக் கொண்டு அபரிமிதமான கூந்தலைப் பெறலாம்.

குழந்தையின் கூந்தலைக் கேசவர்த்தினி கொண்டே விருத்திசெய்யுங்கள்.

# கேசவர்த்தினி

கூந்தலைப் பாதுகாப்பது, விருத்தி செய்வது, அழகு படுத்துவது

**விலை அணா 14**

(மேற் செலவு வேறு)

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்:

## தென் இந்திய ரஸாயனசாலை

**ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்**

REGD. No. M. 4392















# ராஜா

## ஸ்னோ, ஹேர் ஆயில், கஸ்தூரி ஸோப்.

FAS-10

**MANYAM & CO., BANGALORE – MADRAS – BOMBAY.**

கல்கத்தாவிற்கு வினியோகஸ்தர் : ஸ்ரீ S. N. ராவ், 81 - நேதாஜி ரோடு
பம்பாய் ஆபீஸ் : 142, ஓல்டு மோடி ஸ்ட்ரீட், போர்ட்